# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 17 Issue 8 March 2023 Rs.25
ஆண்டு 17 இதழ் 8 மார்ச் 2023 ரூ.25



## 2000 ஆண்டுகளாக தமிழ் மொழியை தமிழர்கள் தனித்துவமாக காப்பாற்றி வருகிறார்கள்!

சொ. சாந்தலிங்கம் நேர்காணல்

அ. ராமசாமி
கயல்
சந்தியா நடராஜன்
தினகரன் ஜெய்
கி. சரஸ்வதி
ரதன்
ஸிந்துஜா
டென்னஸி
வில்லியம்ஸ்
செவல்குளம்
செல்வராசு
ஆகாச மூர்த்தி
விட்டல்ராவ்
லாவண்யா
முன்ஷி பிரேம்சந்த்

ஆண்டு 17 இதழ் 08

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

மார்ச்-2023 விலை ரூ. 25



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

# சொல்முறைமைகள் ஒற்றை நோக்கும் பல்நோக்கும்

அ. ராமசாமி

எழுதப்பெற்ற - சொல்லப்பட்ட முறையால் சிறப்பாகிவிடும் கதைகள் இப்போது அதிகம் வந்து கொண்டிருக்கின்றன. எழுத்தில் தொடர்ந்து இயங்கிக் கொண்டிருக்கும் எழுத்தாளர்கள் சொல்முறைமையில் புதிய மாதிரிகளை உருவாக்குகிறார்கள். ஜனவரி, 2023 அம்ருதாவில் அச்சேறியுள்ள இரண்டு சிறுகதைகளுமே சொல்முறையால் வாசிப்புத்திளைப்பை உண்டாக்கும் கதைகளாக இருக்கின்றன. அதற்குக் காரணம் கதைகளை எழுதிய இந்திரா பார்த்தசாரதிக்கும் கவி. கருணாகரனுக்கும் எழுத்தில் இருக்கும் நீண்ட பயிற்சிகளே என நினைக்கிறேன்.

இந்திரா பார்த்தசாரதியின் கதையின் தலைப்பு: 'இறுதிமுடிவு'. கருணாகரனின் கதையின் தலைப்பு: 'சித்தா'.

இவ்விரு கதைகளில் ஒன்று ஒற்றை நோக்குடன் நேர்கோட்டுக் கதைக் கூற்றாகவும் (Linear narration), இன்னொன்று பல்நோக்குடன் வரிசைமாற்றுச் சொல்முறை (Non -Linear narration) அமைப்பிலும் எழுதப்பெற்றுள்ளன. இவ்விரு சொல்முறைகளில் நேர்கோட்டுச் சொல்முறை மரபான கதைசொல் முறையாகவும் வரிசையற்ற சொல்முறை நவீனத்துவச் சிக்கலை எழுதுவதற்கு ஏற்ற வடிவமாகவும் கருதப்படுகிறது.

> *"வாசல் கதவைத் தட்டிவிட்டுப் போய்விட்டான் எமன். நாடகத்துக்கு முதல் விசிலா?"*
>
> *டாக்டர் ஆச்சரியப்பட்டார்கள். "இவ்வளவு பெரிய அட்டாக் நீங்கள் தப்பிச்சது மிராக்கிள்தான்."*



என்று தொடங்கும் இ.பா.வின் கதைத் தொடக்கம் முதுமைக்கால மனிதர் ஒருவரை முன்னிறுத்தப்போகிறது என்பதைக் காட்டுகிறது. தொடர்ந்து அந்த முதியவர் - நடேசனுக்கும் அவரது அமெரிக்க வாழ் மகனுக்கும் இடையே நடக்கும் உரையாடலாகவே நீண்டுகொண்டே போகிறது. தந்தையைத் தனியாக விட்டுவிட்டு அமெரிக்காவில் இருக்கும் தனக்குள் உருவாகும் குற்றவுணர்வைப் போக்கிக்கொள்ள வேண்டும் மகனுக்கு. அதற்கு ஒரே வழியாக அவன் நினைப்பது சகல வசதிகளுடன் கூடிய முதியோர் காப்பகத்தில் தந்தையை இருத்திவிட்டுச் செல்வது. அதற்கான ஒப்புதலைப் பெறுவது மகனின் நோக்கம். அந்த ஒப்புதலை - இறுதி முடிவைத் தந்தாரா என்பதுதான் கதை. மகனுக்கும் தந்தைக்கும் நடக்கும் உரையாடல்களும் ஒற்றை நிகழ்வுமே கதை. இந்தக் கதையை வாசித்துக் கொண்டிருக்கும்போதே எனக்குள் ஓடிய எண்ணங்கள் இப்படி இருந்தன.

மற்ற ஊர்களின் வணிகப் பண்பலை வானொலிகளின் விளம்பரங்களில் அதிகம் இடம் பிடிப்பவை வீடுகள், மனைகள் சார்ந்த விளம்பரங்களே. கோவையில் அனைத்துத் தரப்பினருக்கான தனி வீடுகளாகவும் அடுக்குமாடிக் குடியிருப்புகளாகவும் கட்டி விற்கும் கட்டுமானத் தொழில்களின் விளம்பரங்களில் இப்போது கூடுதலாக முதியவர்களுக்கான வீடுகள், அவற்றில் கிடைக்கும் வசதிகள், மனம் லயிப்பதற்கான வாய்ப்புகளைத் தரும் கூறுகள் அழுத்தமாகச் சொல்லப்படுகின்றன. தொடர்ந்து கேட்கும் அந்த விளம்பரங்களின் அழுத்தமான படிமங்களைப் பற்றிய காட்சிகளை நேரிலும் பார்க்கிறேன்.

கால் நூற்றாண்டு காலத்திற்கு முன்பே முதியோர் இருப்பு நிலை குறித்த விவாதங்களை ஐரோப்பியப் புனைகதையாளர்கள் பேசத்தொடங்கிவிட்டார்கள். இந்திய மொழிகளில் தமிழ் முந்திக்கொண்டு விவாதங்களைத் தொடங்கி இருக்கிறது. அதன் பின்னணியில் உலகமயம் ஏற்படுத்தித் தந்துள்ள வாய்ப்புகளும் நெருக்கடிகளும் உள்ளன.

தகவல் தொழல்நுட்பக்கல்வி வளர்ச்சி இந்திய மனிதவளத்தை உலகப் பொதுமை ஆக்கியிருக்கின்றது. அதனால் ஏற்பட்ட புலப்பெயர்வுகள் குடும்ப உறவுகளில்





ஏற்படுத்தியுள்ள பிளவுகள் பாரதூரமானவை. முதியவர்களுக்கு தனிமையையும் அதன் தொடர்ச்சியில் அச்சத்தையும் கையறு நிலையையும் உண்டாக்கியிருக்கிறது. அவர்களின் வாரிசுளைக் குற்றவுணர்வுக்குள் நிறுத்தித் தவிக்கவிடுகிறது.

இருதலைமுறைகளும் இந்த உணர்வுநிலையை எதிர்கொள்வதை யார் எழுதினால் சரியாக இருக்கும்? இருதரப்பையும் சமநிலைப்படுத்தி எழுத முடியும் எனக்காட்டுகிறார் இந்திரா பார்த்தசாரதி. முதியவரின் கோணத்தில் சொல்லப்படும் கதையின் முடிவு எதிர்பாராத திருப்பம். மகனின் விருப்பத்தை நிறைவேற்றாமல், இப்போது அவர் இருக்கும் அந்த வீட்டையே ஒரு முதியவர்களின் இடமாக மாற்றிச் சில முதியவர்களை இலவசமாகத் தங்கவிடலாம் என்ற முடிவை - இறுதிமுடிவாக எடுக்கிறார் நடேசன்.

கதையைத் தொடங்குவதிலிருந்து முடிக்கும்வரை கதைசொல்லியோடு அல்லது மையப்பாத்திரத்தோடு ஒன்றி வாசிக்கும் வாசிப்பைக் கோருவது இ.பா.வின் கதை. ஆனால், அதற்குப் பதிலாக நிதான வாசிப்பைக்கோரும் நவீனத்துவக் கதையாடலின் வடிவத்தில் எழுதியிருக்கிறார் கருணாகரன்.

> *மழைவிடாது பெய்து கொண்டிருந்த ஒரு பின்னேரம் தேவை சித்தியை மணம் முடித்து வந்தார் சித்தப்பா.*

என்று தொடங்கும் இந்தக் கதையின் தொடக்கமும் ஒருவரின் கதையைச் சொல்லும் தொனியையே கொண்டிருக்கிறது. ஆனால், காலமாற்றத்தில் முன்னும் பின்னும் நிகழும் நிகழ்வைச் சொல்வதும் இடையில் நடந்த நிகழ்வொன்றை விவரிப்பதுமான சொல்முறையால் தனிமனிதர் ஒருவரின் கதையைப் பெரும் அரசியல் காலகட்டத்தின் கதையாக மாற்றி விடுகிறார்.

முதல் நிகழ்வு தேவி சித்தியை மணம் முடித்த சித்தப்பாவின் கடந்த கால வாழ்க்கை இயக்கத்தோடு தொடர்புடையது என்பதைச் சொல்கிறது. ஈழப்போராட்டத்தில் இயக்கம் என்பது விடுதலைப்புலிகளின் இயக்கத்தையே குறிக்கும். அதில் முழுமையாக ஈடுபடும் ஒருவர் தனது உடைமைகள் அனைத்தையும் - உயிரையும் இயக்கத்திற்காகத் தரத் தயாரானவர்கள் என்பதை விவரிக்கும் விதமாக அவரது பெயரே இப்போது இல்லை; மறந்துவிட்ட நிலை என்பதாகக் கதை விவரிக்கிறது. கெட்டிக்காரியான தேவி சித்தியோடு சேர்ந்து அவரது வாழ்க்கை மீட்டெடுக்கப்படும் நிலை அடுத்த நிகழ்வு. விளம்பன் என்ற இயக்கப் பெயரில் இருந்த சித்தப்பா, கதைசொல்வதில் கெட்டிக்காரர் என்ற தகவலைத் தருவதின் மூலமாக போர்க்கால அனுபவங்களைக் கதைக்குள் கொண்டுவரும் வாய்ப்பை உருவாக்குகிறார். இயக்கத்தில் அவரது வேலைகளையும் மற்றவர்கள் செய்த வேலைகளையும் தன்னுணர்வு கூடிய சொல்முறையாக இல்லாமல் விவரிக்கும் விதத்தில் கதை நிகழ்வுகளாக ஆக்கப்பட்டிருக்கிறது. புலிகள் இயக்கம் இயங்கிய விதம், சாகசங்கள், அரச படைகளின் இயக்கத்தை எதிர்கொண்டவிதம், சிங்களப் பொதுமக்களிடம் இருந்த தமிழர் மீதான வன்மம், அதனையும் நிதானமாக எதிர்கொண்ட விதம் எனப் பலவற்றைக் கதைக்குள் கொண்டுவர சித்தப்பாவின் கதை சொல்லும் திறனைப் பயன்படுத்திக்கொள்கிறார் கருணாகரன்.

மொத்தக் கதையிலும் சித்தப்பாவின் கதையே சொல்லப்படுகிறது. ஆனால், அவர் வாழ்க்கையை எதிர்கொண்ட நிலையை விவரிப்பதின் வழியாகக் கதையின் தலைப்பான 'சித்தா' என்பதற்கு வேறொரு அர்த்தத்தை உருவாக்குகிறார். சித்தி, சித்தப்பா என்ற உறவுமுறைப் பெயர்களில் தொடங்கும் கதையின் தொடக்கம் ஒரு குடும்ப நிகழ்வுகளின் அடுக்குகளாக விரிவடையப்போகிறது என்ற எண்ணத்தை கதையில் அடுத்தடுத்த இடம்பெறும் நிகழ்வுகள் மாற்றுகின்றன. அவர் சொல்லும் நிகழ்வுகளின் வழியாகச் சித்தப்பாவின் வாழ்க்கை பற்றிய நோக்குநிலையை வெளிப்படுத்துகிறார். அவரது வாழ்வியல் பார்வையை மாற்றியதில் போர்க்காலமும் இயக்கமும் செலுத்திய பங்களிப்பு விவரிக்கப்படுகிறது. சித்தி, சித்தப்பா என்ற உறவுமுறைப் பெயர்களில் தொடங்கும் கதையின் மையப்பாத்திரம் வாழ்க்கையை அணுகும் போக்கில் ஒரு சித்தரின் நோக்குநிலையைக் கொண்டதாக மாறுவதைக் கதையாக்கியிருக்கிறார் கருணாகரன். "போரின் முடிவு எப்படியெல்லாம் ஆட்களை மாற்றி யாருக்கும் பாத்தியளா" என்ற உரையாடல் வரியொன்றை வாசித்துவிட்டுக் கதையின் தலைப்பை அதனோடு இணைத்து நோக்கும்போது, கதைத்தலைப்பான "சித்தா" ஒரு குறியீட்டுத் தலைப்பாக முன்னிற்கிறது.

இரண்டு கதைகளும் வாசிக்க வேண்டிய கதைகள்; வாசித்துப் பாராட்டவேண்டிய கதைகள்.

"அ. ராமசாமி" <ramasamytamil@gmail.com>

# முயங்கொலிக் குறிப்புகள்

**கயல்**

ஓவியம்: **நடேஷ்**



1
இத்தனை வருடங்களில்
அவள்
அவனுக்காக எதுவும் பெரிதாகச்
செய்ததேயில்லை.

ஒவ்வொரு முறையும்
அவன் ஓய்வதை உணர்கிற
துல்லிய நொடியில்
அவள் உச்சம் எய்துகிற
பாவனை தவிர்த்து.

2
காலை உணவை நாவு சுழற்றி
ருசித்தலுக்கு இடையே
சிறு சுருள் முடியொன்று
உதட்டுக்கும் பல்லுக்கும்
இடையில் சிக்கிட
பதறிய முகத்தைப் பார்த்து
இதழ்கள் குவித்து ஊதியபடியே
கருணையுடன் செல்லக்குட்டி என்று
விரித்துச் சுருக்கிச்
சிமிட்டின கண்கள்.

மற்றொரு முறை
குறும்பாக
யாமத்திலும்!

3
இத்தனை வருடங்களில்
எவ்வளவு முயற்சித்தும்
அம்மா கைருசி வரவே இல்லை
உனக்கு என்கிறான்
எல்லாப் பகல்களிலும்.

கவிகிற இரவின்
காதுகள் கேட்டிருக்கலாம்
உன் எந்தச் சாகசமும்
பரவச லிபியை உடல் முழுக்கப் பேசிய
முன்னாள் காதலன் போல் இல்லையென்கிற
அவளின் கிசுகிசுப்பை.

4
திருவிழா தெரியாதவள்
ஆடிப் பெருக்கை நேரிட்டு அறியாதவள்
எதிர்வீட்டு ராமு
பக்கத்துவீட்டு சத்தீசு எவருடனும்
தெருவில் விளையாட
அனுமதி மறுக்கப்பட்டவள்.



பெண்கள் பள்ளிக் கூடத்திலேயே பயின்றவள்.
எவ்வளவு இறைஞ்சியும்
இன்பச் சுற்றுலா வாய்க்காதவள்.
முதுகலைப் படிப்புள்ள கல்லூரி
டவுனில் என்பதால் இளங்கலையோடு
நிறுத்தப்பட்டவள்.
அவளுக்கென்ன தெரியும் சின்னப் புள்ள என்ற
அடைமொழியே அடையாளமானவள்.

இரண்டு அப்பன்களும்
ஒரு நாளில் பேசி
மாற்றிக்கொண்ட தட்டு
மூடிய அறைக்குள்
போய் முட்டிநின்றது.

அன்னமும் மயிலும் செதுக்கிய
தேக்குக் கட்டிலின்
நடுவே அமர்ந்திருந்தது
இதற்குமுன் பார்த்தேயிராத முகத்துடன்
அவள் மீதவாழ்வு.
அனுமதிக்கப்பட்டவைகளின் பட்டியலில்

அடுத்தநாள் காலை
நீல மசியில் அவள் அழுத்தந் திருத்தமாய்
எழுதிய சொல் கலவி.

சிலநாட்களில் மாற்றினாள்:
வாழ்நாள் முழுக்க.

5

அவள்:
முட்டாளா நீ
மூன்று நாட்கள் என்பது தோராயம்.
துல்லியக் கணக்கு இல்லை
இதைப் புரிந்துகொள்ளவே இரண்டரை வருடங்கள்.
தள்ளிப் போ.

அவன்:
பாய்ச்சலுக்குப் பின் குதிரை
ஓய்ந்து சரியும் போது
அணைத்து நெற்றி முத்தம் கேட்கும்
அறிவிலி நீ

அவள்:
இடதா வலதா
எந்தப் பக்கம் ஒருக்களித்துப் படுக்கிறேன் என்பதை
மார்பின் திண்மைக் குறைவில் அறிபவன்,
முன்னிருந்தால்
நெஞ்சிலும் பின்னகர்த்த முதுகிலும்
தாலி குத்தும் என்று
ஒரு முறையாவது பரிதவித்திருக்கிறாயா?

அவன்:
கட்டிலில் நீ கடைபரப்பும்
அத்தனைக் கொஞ்சலும்
நான் நம்ப நினைக்கிற பொய்.
உறவு மறுத்தலின் உருமறைப்பு என்று
அறியாதவனா நான்.

அவர்கள்:
இத்தனை வருடத் தாம்பத்தியத்தில்
ஓர் இரவும் நாங்கள்
தனியே படுத்ததில்லை.

தொடரும்

கயல் <dr.kayalvizhi2020@gmail.com>

# செங்கோட்டை பாஸ்ட் பாசெஞ்சர்

## சந்தியா நடராஜன்



அப்போது 'மெட்ராஸ்' என்றுதான் இந்த மாநகருக்குப் பெயர். வள்ளலார் மட்டும் 'தருமமிகு சென்னை' என்று அவர் மெட்ராஸில் வாழ்ந்த காலத்தில் பாடியிருக்கிறார். மற்றபடி சென்னை ஆனது 1996ஆம் ஆண்டில். இந்தப் பெயர் மாற்றம் குறித்த அறிவிப்பை 17-7-1996இல் அன்றைய முதலமைச்சர் கலைஞர் மு.கருணாநிதி தமிழக சட்டசபையில் அறிவித்தார். ஆரூர்க்காரரின் அறிவிப்புக்குப் பின் இந்த நகரத்து இளைஞர்கள் மெல்ல மெல்ல 'சென்னை பாய்ஸ்' ஆனார்கள்.

நான் மெட்ராஸில் வந்திறங்கியவன். தற்போது சென்னைவாசியாக வாழ்ந்து வருகிறேன். இது தருமமிகு சென்னைதான். சந்தேகமே இல்லை. ஆளற்றவர்களை ஆளாகியிருக்கிறது இந்த மாநகரம். ஊர் பேர் தெரியாமல் உள்ளே வந்தவர்களுக்கு உபகாரம் செய்து உச்சத்தில் உட்கார வைத்தது இந்த 'காஸ்மோபாலிட்டன் சிட்டி'.



பள்ளிப் படிப்பைப் பாதியிலே விட்டுவிட்டு, வீட்டுக்குத் தெரியாமல் ஓடி வந்தவர்கள் பலர். அவர்கள் அனைவருக்கும் வாழ வழிகாட்டியது இந்த நகரத்து வீதிகள். சினிமா சிலரை நாடறியச் செய்தது. சில்லறை வியாபாரம் செய்து பிழைத்தவர்கள் அவர்களது சொந்த மண்ணில் 'பிரமுகர்' ஆனார்கள்.

அரசியலுக்கு வந்தவர்கள் ஆதாயம் பெற்றார்கள். பணபலமும் பதவி சுகமும் பெறுமதில்களுக்குள் அவர்களது வாழ்விடங்களை உல்லாசபுரிகளாக்கித் தந்தன.

தருமமிகு சென்னையில் எல்லோருக்கும் வாழ வழி தெரிந்தது. சென்னை வந்தோரை வரவேற்றது. டீக்கடை என்றால் மலையாளிகள்; நிலபுலம் வணிகம் என்றால் தெலுங்கர்கள் என்றிருந்த மெட்ராஸ் மறைந்து, இன்றைய சென்னையில், வீட்டுக் காவலாளியிலிருந்து உடுப்பி ஓட்டல் வரையிலும், கட்டுமான

தளங்களில் இருந்து முக சிகை அலங்காரக் கூடங்கள் வரையிலும் இந்திக்காரர்கள் தமிழில் பேசிக் கொண்டிருக்கிறார்கள். அடுத்த சட்டமன்றத் தேர்தலில் சென்னை வாழ் வடபுல உழைப்பாளர்கள் பேரவை ஒன்று அமையலாம். ஓர் அசாமியாரோ ஒரு நேப்பாளியோ ஒரு பீகாரியோ தமிழக சட்டமன்ற உறுப்பினரானால் வியப்பதற்கில்லை. வந்தாரை வாழவைக்கும் பட்டணம் இது.

மெட்ராஸ் என்ற சொல் காதில் விழுந்தபோது எனக்குப் பத்து வயது இருக்கலாம். அப்போது நான் கிராமத்தில் படித்து வந்தேன். காவிரிப்பூம்பட்டினம் என்றழைக்கப்படும் பூம்புகாரிலிருந்து 5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள கீழப்பெரும்பள்ளம் என்ற ஊர்தான் எங்கள் பூர்வீக கிராமம். அங்கே எங்கள் பக்கத்து வீட்டுக்காரரான குஞ்சிதபாதம் என்கிற குஞ்சு பிள்ளை ஒரு நெல் வியாபாரி. எப்போதும் வீட்டின் முன்புறம் ஒரு பெரிய மரச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி உரத்த குரலில் வருவோர் போவோரிடம் பேசிக் கொண்டிருப்பார். அவர் ஏதோ கேஸ் விஷயமாக சென்னைக்கு பொய் வந்தவர் போல. அவரது சபைக்கு யாராவது வந்துவிட்டால் அவரது மெட்ராஸ் புராணம் ஆரம்பமாகும். கை ரிக்சாக்காரனின் மெட்ராஸ் பாஷையில் கொஞ்சம் பேசிக் காண்பிப்பார். கீதா கஃபே ஓட்டலில் சாம்பாரில் மிதக்கும் இட்லியை விட சாம்பாரைப் பருகிக் களிக்கும் மெட்ராஸ் கலாசார வரலாற்றைக் கேட்பவர் காது கொதிக்கச் சொல்லிக்கொண்டே போவார். இவரிடமிருந்துதான் மெட்ராஸ் என்ற சொல் மனத்தில் பிடிபட்டது.

முதன்முதலாக என் கண்கள் கண்ட மெட்ராஸின் அடையாளங்கள் அந்தக் காலத்து சினிமா டிக்கெட்டுகள்தான். என் தாய் மாமா அப்போது மெட்ராஸ் லா காலேஜில் படித்துக் கொண்டிருந்தார். அவர் ஊருக்கு வரும்போது அவர் விட்டுச் சென்ற காசினோ, பாரகன், கெயிட்டி தியேட்டர்களின் சினிமா டிக்கெட்டுகள் அலமாரியில் எனக்கு கிடைத்தன. அவை வண்ணமயமானவை.

அவ்வப்போது குஞ்சு பிள்ளையின் மெட்ராஸ் புராணம் மட்டும் ஒலிச்சித்திரமாக ஒளித்துக் கொண்டிருக்கும். கீதா கஃபே உரிமையாளர் ஜெயராமய்யர் எங்கள் ஊரை அடுத்த கடற்கரை கிராமமான வணகிரியிலிருந்து சென்னைக்குச் சென்று 'செட்டில்' ஆனவர் என்பார் குஞ்சுப்பிள்ளை. ஜெயராமய்யரும் தன்னைப்போல் நெல் வியாபாரம் செய்தவர் என்று தனது அந்தஸ்தையும் உயர்த்திக் கொண்டு கீதா கஃபேயின் வளர்ச்சி குறித்துப் பல கதைகள் திரித்துக் கொண்டிருப்பார். குஞ்சுப்பிள்ளையின் சகாக்கள் மேல் துண்டால் வாயைத் துடைத்தபடி பிள்ளையின் கதைகளில் மூழ்கித் திளைப்பார்கள்.

1969 வாக்கில் கிராமத்திலிருந்து மாயவரம் என்ற நகரத்திற்கு வந்தேன். அங்கே ஆறாம் வகுப்பிலிருந்து எஸ்.எஸ்.எல்.சி வரை நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் படித்து வந்தேன். மாயவரம் ரயில்வே ஸ்டேஷனில்தான் முதன்முதலாக ரயிலைப் பார்த்தேன். ஒரு ஊருக்குச் செல்வதற்கு நன்னிலம் வரை ரயிலில் சென்றேன். 'பேரளம் வடை' விற்றார்கள். ஒரு வடை போதும் ஒரு வேளை உணவுக்கு. மாயவரம் வாழ்வுதான் மனிதர்களை நேசிக்கக் கற்றுக் கொடுத்தது. ஊர் சுற்றும் ஆசையை வளர்த்து எடுத்தது.

கல்லூரிக் காலத்தில்தான் ஊர் சுற்றும் சுதந்திரம் கிடைத்தது. டே எக்ஸ்பிரஸ் என்ற சோழன் எக்ஸ்பிரஸ் மூலம் தஞ்சைக்கும் திருச்சிக்கும் செல்ல ஆரம்பித்தேன். மெட்ராஸ் போவதற்கு மாயவரத்துக்காரர்களுக்கு உகந்த ரயிலாக செங்கோட்டை ஃபாஸ்ட் பாசஞ்சர் அமைந்தது. அந்த ரயில் எண் 110. சென்னை எக்மோர் நிலையத்தை வந்தடையும் முதல் ரயில் இந்த 'ஒன்டென்'. தகர டின்களில் வத்தல் வடாம் எடுத்துக்கொண்டு மெட்ராஸ் செல்வதில் அந்தக் காலத்து மனிதர்களுக்கு எந்தச் சின்னத்தனமும் இருப்பதாகத் தோன்றியதில்லை. கட்டுச்சோறு வாசனை இல்லாத கம்பார்ட்மெண்டுகள் அரிது. மாயவரம் ரயில்வே ஸ்டேஷன் ரிசர்வேஷன் கிளார்க் தன்னை ரயில்வே போர்டின் தலைவராகவே நினைத்துக்கொண்டு பணியாற்றுவார். அவரிடம் ஒரு கேள்விக்கு மேல் மறு கேள்வி கேட்டால் அவர் முகத்தில் அனல் வீசும். அரசவைக்குள் அத்துமீறி நுழைந்துவிட்ட குடிமகனைப்போல் அங்கு வரும் எளிய மனிதர்களிடம் நடந்துகொள்வார்.

இப்படிப்பட்ட சர்வ அதிகாரம் படைத்த ரிசர்வேஷன் கிளார்க் முன்பு நின்று முன்பதிவு செய்துகொண்டு நானும் சில நண்பர்களும் 'ஒன்டென்' ரயில் மூலம் மெட்ராசுக்குப் புறப்பட்டோம். அப்போது நான் கல்லூரியில் இளங்கலை முதலாமாண்டு மாணவன். பியூசி வரை என்னுடன் படித்த திருமால் மெட்ராஸ் கால்நடை மருத்துவக் கல்லூரியில் சேர்ந்திருந்தான். அவனது அழைப்பின் பேரில்தான் இந்த மெட்ராஸ் பயணம். இரவு முழுவதும் நங்கள் பார்க்கப்போகும் மாநகரத்தைப் பற்றிப் பலவிதமாகப் படம் வரைந்து பார்த்துக்கொண்டே இருந்தது ஒன்றும் பெரிதாகப் பிடிபடவில்லை. விடியற்காலைப் பொழுதில் ரயில் தாம்பரம் ரயில் நிலையம் வந்தடைந்தது. பிளாட்பாரத்தில் கும்பல் கும்பலாய் மனிதர்கள் தென்பட்டார்கள். நடையிலும் உடையிலும் வித்தியாசம் தெரிந்தது. மாநகரத்தின் வசீகர வாசனை நெஞ்சை நிறைத்தது. பிறகு கடந்துபோன எல்லா ஸ்டேஷன்களின் கட்சிகளும் தேவலோகக் காட்சிகளாகவே மனத்தில் பதிந்தன.

ஒன்டென் விடிவதற்கு முன்பே எழும்பூர் ரயில் நிலையத்தை வந்தடைந்தது. திருமால் எங்களை வரவேற்று ரயில் நிலையத்தின் பின்புற வழியாகத் தினத்தந்தி அலுவலகத்தைக் கடந்து

(தொடர்ச்சி 13ஆம் பக்கம்)

(10ஆம் பக்கத் தொடர்ச்சி)

கால்நடை மருத்துவக் கல்லூரி மாணவர் விடுதிக்கு அழைத்துச் சென்றான். என் மனம் போட்டு வைத்திருந்த கோலம் ஒன்று. நான் அங்கே பார்த்த கோலம் வேறொன்று. திருமால் கொஞ்சம் கண்ணயர்ந்தான். என் கால்கள் ஓரிடத்தில் தரிக்கவில்லை. விடுதியின் சுற்றுச் சுவரைக் கடந்து வெளியே வந்தேன். காலாற நடந்தேன். ஒரு மலையாளத்தாரின் டீக்கடை கண்ணில் பட்டது. உள்ளே நுழைந்து அமர்ந்தேன். பட்டர் பிஸ்கட், கேக் என்று பலவிதமான தின்பண்டங்கள் கொண்ட ஒரு தட்டை என் முன் கொண்டு வந்து வைத்தார் கடைக்காரர். ஒரு டீ வேண்டுமென்றேன். தட்டிலிருந்து இரண்டு மூன்று பிஸ்கட்டுகளை எடுத்துச் சுவைத்தேன். தட்டில் மிச்சம் வைக்கலாமா கூடாதா என்று தெரியவில்லை. கேட்கவும் கூச்சம். சரி முடிந்தவரை சாப்பிடலாம் என்று மனத்தைத் தேற்றிக்கொண்டேன். நகரத்து நாகரீகங்களைக் கண்டறிவது எப்படி? கொஞ்சம் சிந்தித்துக் கொண்டிருக்கையில் கடைக்காரர் டீ கொண்டு வந்தார். “தட்டில் இருப்பவை போதுமா?” என்று மலையாளம் கலந்த தமிழில் கேட்டார். நான் ஒரு மாதிரித் தலை அசைத்தேன். அவர் மீதமிருந்த பிஸ்கட்டுகளுடன் தட்டை எடுத்துக்கொண்டு போய்விட்டார். எனது வெட்கமும் மன இறுக்கமும் ஒருவாறு தொலைந்துபோயின. ஒன்று தெளிவானது. “டீக்கடையில் ஒரு தட்டு நிறைய வைக்கும் பிஸ்கட்டுகளில் சாப்பிட்டவைக்கு மட்டுமே பணம் தர வேண்டும். மீதம் வைக்கலாம்“ என்ற நகரத்தின் டீக்கடை நாகரீகம் அன்று முதன்முதலாக எனக்குத் தெரிய வந்தது.

நாயர்கள் அரபு நாடுகளுக்குப் போகத் துவங்கியபின் மாநகர டீக்கடைகளில் தோற்றமும் மாறிக்கொண்டே வருகிறது. திரைப்படங்களில்கூட நாயர் டீக்கடைகள் தொலைந்துபோய் தமிழர்கள் டீ ஆற்றிக்கொண்டிருக்க வடிவேலு அலப்பறை மையம் கொண்டிருக்கிறது.

2022இல் சென்னைத் தேநீர்க் கடைகளில் தம் டீ, மசாலா டீ, ஹனி லெமன் டீ, ஜிஞ்சர் டீ, இரானி டீ, ஜாஸ்மின் டீ, ஹெர்பல் டீ, கிரீன் டீ, ஹைபிஸ்கஸ் டீ என்று எண்ணற்ற டீ வகைகள் இறக்குமதியாகி நமது பர்ஸை காலி செய்து வருகின்றன. ஒரு கப் டீ முப்பது ரூபாயிலிருந்து இருநூறு ரூபாய் வரை விற்கப்படுகிறது. தேநீர்க் கடைகள் நகைக்கடைகள் போல ஒளி வெள்ளத்தில் மிதந்துகொண்டிருக்கின்றன. அங்கே நவீன உடை அணிந்து பெண்கள் பணிபுரிகிறார்கள். பாதசாரிகளுக்கு நடைபாதை டீக்கடைகள் இருக்கின்றன.



பிறகு சென்னையில் நான் போக வேண்டிய இடம் மூர் மார்க்கெட். திருமாலும் நானும் நடந்தே மூர் மார்க்கெட் சென்றோம். தூரம் பெரிதாகத் தெரியவில்லை. அங்குச் சென்று டேல் கார்னகியின் மூன்று முக்கியமான நூல்களை வாங்க வேண்டும் என்பதே எனது இலக்கு. கடல் போல விரிந்து கிடந்தன பழைய புத்தகக் கடைகள். தேடிச் சென்ற நூல்கள் எளிதில் கைவசமாகின. How to Win Friends and Influence People, How to Stop Worrying and Start Living, How to Make an Effective Public Speaking ஆகிய மூன்று நூல்களும் கிடைத்தவுடன் ஏதோ உலகத்தையே வென்றெடுத்துவிட்டது போன்ற உணர்வு என்னை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. மேலும் பல ஆங்கில, தமிழ் நூல்களை வாங்கி குவித்து அவற்றை அள்ளிக்கொண்டு விடுதிக்குத் திரும்பினோம். மறுநாள் டூரிஸ்டு கைடு போல திருமால் மவுண்ட் ரோடு, மெரினா பீச், மியூசியம் என்று பல்வேறு இடங்களுக்கு கூட்டிச் சென்றான். வெயில் கொளுத்தியது. கண்ணில் பட்ட ஏசி வசதி கொண்ட கடைகளில் தேவை எதுவும் இல்லாமலேயே உள்ளே நுழைந்து எங்களை ஆசுவாசப்படுத்திக் கொண்டோம்.

பெரும்பாலும் காலண்டர்கள் உலாவந்த நகரத்துச் சாலைகளில் கால்நடையாகவே சுற்றி அலைந்தோம். அதிகபட்சம் பேருந்துகள் துணைக்கு வந்தன. அலைந்து அயர்ந்த கால்களுடனும் மெட்ராஸை வியந்து விரிந்த கண்களுடனும் மீண்டும் செங்கோட்டை பாஸ்ட் பாசெஞ்சர் ரயிலேறி மாயவரம் திரும்பினேன். அதாவது எங்கள் மொழியில் 109 ட்ரெயின் என்னை ஊரில் கொண்டு சேர்த்தது.

(தொடரும்)

சந்தியா நடராஜன்
<sandhyapathippagam@gmail.com>

# 2000 ஆண்டுகளாக தமிழ் மொழியை தமிழர்கள் காப்பாற்றி வருகிறார்கள்!

**முனைவர் சொ. சாந்தலிங்கம்**
நேர்கண்டவர்: **தினகரன் ஜெய்**

முனைவர் சொ. சாந்தலிங்கம், விருதுநகரில் இளங்கலை விலங்கியல் படிப்பை முடித்த இவர், மதுரை தியாகராசர் கலைக் கல்லூரியில் முதுகலைப் படிப்பில் தமிழ் இலக்கியத்தை முடித்தார். பின்னர் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை நடத்திய கல்வெட்டியல் படிப்பில் பட்டயக் கல்வியைப் பயின்றார். 'தொண்டை மண்டலம்: நாடுகளும் ஊர்களும்' எனும் தலைப்பில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றார். தமிழ்நாடு தொல்லியல் துறையில் பணியில் சேர்ந்து, இறுதியில் உதவி இயக்குநராகப் பணி ஓய்வு பெற்றார். தற்போது பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையத்தின் செயலாளராக உள்ளார். மேலும் 'தொல்லியல் கழகம்' எனும் அமைப்பின் துணைத்தலைவராகவும் உள்ளார். இவரது 'வரலாற்றில் தகடூர்', 'சித்திரமேழி', 'மதுரையில் சமணம்' போன்ற நூல்கள் மிக முக்கியமானவையாகும். பொ. இராசேந்திரனுடன் இணைந்து 'கோவில் கலை', 'மாமதுரை' ஆகிய நூல்களையும் எழுதியுள்ளார். மேலும் திருக்கோவில் உலா என்ற நூல் உட்பட மொத்தம் 20க்கும் மேற்பட்ட நூல்களையும் Studies in archaeology, Jainism in Pandya Nadu என்ற ஆங்கில நூல்களையும் எழுதியுள்ளார்.

மதுரையில் உள்ள சாந்தலிங்கம்இல்லத்தில் 'அம்ருதா' இதழுக்காக பதிவு செய்யப்பட்ட நேர்காணல் இது.

**கல்கி எழுதிய 'பொன்னியின் செல்வன்' திரைப்படமாக வெளிவந்ததை ஒட்டி சோழர்கள் மீண்டும்பேசுபொருளாக ஆனார்கள். அப்போது, பார்ப்பனீயத்தை சோழர்கள் பாதுகாத்தார்கள் என்ற வாதம் சிலரால் முன்வைக்கப்பட்டது. இது ஏற்புடையதா?**

சோழர்கள் முழுக்க முழுக்க பார்ப்பனர்களுக்கு ஆதரவாகஇருந்தார்கள் என்றவாதம்ஏற்புடையதல்ல. தமிழ்நாட்டில் சோழர் கால ஆட்சி என்பது கி. மு. 846இல் தான் தொடங்குகிறது. சங்க காலத்தில் சோழர்கள் இருந்தார்கள். அதற்குப் பிறகு 600 ஆண்டு காலம் என்ன ஆனார்கள் என்று நமக்குத் தெரியவில்லை. கி.பி. 846இல் சோழர் ஆட்சி தொடங்கி 1279இல் முடிவடைகிறது.



பொதுவாக சோழர்கள், பார்ப்பனீயத்தை ஆதரித்ததாக முடிவுக்கு வர முடியாது. ஏனென்றால், தமிழ்நாட்டில் சோழர்களுக்கு முன்னோடியாக கோவில் பண்பாட்டை உருவாக்கியவர்கள் பல்லவர்கள். அவர்கள் ஆந்திர பகுதியில்இருந்துவந்துதமிழ்நாட்டில் காஞ்சிபுரத்தை தலைநகராகக் கொண்டு பல்லவ சாம்ராஜ்யத்தை உருவாக்கினர். பல்லவர்கள் தான் கற்களால் கோவில் கட்டி வழிபடக்கூடிய ஒரு மரபை தமிழ்நாட்டுக்கு அறிமுகப்படுத்தினார்கள். அதற்கு முன்பு மண்ணாலும் மரத்தாலும் செங்கற்களாலும் கட்டப்பட்ட கோவில் வழிபாட்டு முறைகள் இருந்தன. அவையெல்லாம் கால வெள்ளத்தில் அடித்து சென்றுவிட்ட காரணத்தாலே கல்லால் கோவில் கட்டி நிரந்தரமான கோவில்களை அமைத்து அதில் பூசைகளை செய்வதற்காக ஆந்திர பகுதியிலிருந்து பிராமணர்களை கொண்டு வந்து குடியமர்த்தினார்கள். எனவே, கோவில் ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு



முக்கியமான அங்கமாக, இன்னும் விளக்கமாக சொல்வதென்றால் அதிகார மையமாக செயல்பட்டது. கோவில் நிர்வாகத்தின் அமைப்பைக் கொண்டே ஊர்களை நிர்வாகம் செய்வது, ஊரிலிருந்து வரி வசூல் செய்வது போன்ற அனைத்து பணிகளையும் அரசர்கள் செய்தனர்.

எனவே, கோவில் வழிபாட்டு முறையின் தொடக்கம் என்பது பல்லவர் காலத்திலே தொடங்கிவிட்டது. தொடர்ந்து பல்லவர், சோழர், பாண்டியர் பகுதி வரை நீடித்தது. ஆனால், சோழர்கள் காலத்தில்தான் நிறைய கோவில்கள் கட்டப்பட்டன. அதுவும் குறிப்பாக சோழ நாட்டிலே நீர் வளமும் நிலவளமும் மிகுந்த ஒரு நிலப்பரப்பாக இருந்த காரணத்தால் ஊர் தோறும் கோவில்கள், ஊருக்கு இரண்டு மூன்று கோவில்கள் என்று சோழர்கள் கட்டினர். சைவ, வைணவ கோவில்கள் எந்த வேறுபாடும் இல்லாமல் கட்டப்பட்டன. அவ்வாறு கட்டுகின்றபோது அதிலே பணி செய்வதற்கு நிறைய பிராமணர்கள் தேவைப்பட்டார்கள். அவர்களைக் கொண்டு வந்து குடியமர்த்தி அவர்களுடைய வாழ்வாதாரங்களுக்காக நிலங்களை வழங்கும்போது பிரம்மதேயங்கள், சதுர்வேதி மங்கலங்கள் என்று வழங்கினார்கள். எனவே, அந்தக் கோவில் பூசை பணிகள், கோவில் நிர்வாகப் பணிகள் என்று பிராமணர்களுடைய செல்வாக்கு அல்லது ஆதிக்கம் அதிகமாக இருந்தது. ஆனால், அரசு நிர்வாகத்தில் பல்வேறு தரப்பினரும் பதவிகளில் இருந்தனர். படைத்தலைமையிலேயோ அல்லது வேறு சில நிர்வாக மட்டத்திலேயோ பல்வேறு தரப்பை சேர்ந்தவர்கள் அதிகாரிகளாக இருந்தார்கள். எனவே, முழுக்க பார்ப்பனிய ஆட்சியாக சோழர்கள் ஆட்சி இருந்தது என்று சொல்வதற்கில்லை.

**வைதீகம், சோழர்களின் ஆட்சியில் தான் புத்துயிர் பெற்றது என்றும் சமஸ்கிருதம் வளர்த்தெடுக்கப்பட்டது என்றும் குற்றம் சாட்டப்படுகிறதே...**

இதை குற்றச்சாட்டு என்று சொல்ல முடியாது. திராவிட நாடு முழுவதும் சமஸ்கிருதம் பரவியது. ஆனால், தமிழ் மொழி தன்னைத் தனியே தக்கவைத்துக் கொண்டது. சமஸ்கிருதம் முழுக்க முழுக்க தன்னை புதுப்பித்துக் கொண்டே போனது. இன்று சேர நாட்டில் உள்ள கேரளாவிலோ கர்நாடகத்திலோ ஆந்திராவிலோ இருக்கக்கூடிய எழுத்து முறையை பார்த்தால் அவர்கள் சமஸ்கிருத எழுத்து முறையை அப்படியே ஏற்றுக்கொண்டவர்களாக இருக்கிறார்கள். ஆனால், தமிழ்நாட்டு மக்கள் எந்த காலத்திலும் சமஸ்கிருத எழுத்து முறையை ஏற்றுக்கொண்டவர்கள் இல்லை. தமிழ் மொழி தனித்து இயங்கக்கூடிய வல்லமை பெற்ற காரணத்தாலேயே இன்று வரை தனித்து இயங்குகிறது. எனவே, சமஸ்கிருதம் இங்கே ஆட்சி மொழியாகவோ அதிகார மொழியாகவோ பேச்சு மொழியாகவோ எழுத்து வழக்கிலேயோ நிர்வாக மொழியாகவோ ஒருநாளும் இருந்ததில்லை. பூஜை மொழியாக, சடங்கு மொழியாகத்தான் இருந்தது. இன்றும் இந்தியா முழுக்க இருக்கிறது.

கோவில்களில் சமஸ்கிருதம் மந்திரங்களாக ஓதப்பட்டது. சடங்குகளிலும் யாகங்களிலும் ஓதப்பட்டதே தவிர சமஸ்கிருதம் செல்வாக்கு பெறவில்லை. வைணவர்கள் தங்களுடைய உரைகளை மணிபிரவாள நடையிலே எழுத ஆரம்பித்த போது

தான் சமஸ்கிருதக் கலப்பு அதிகமாக ஏற்பட்டது. மற்றபடி சமஸ்கிருதம் ஒரு மொழியாக கோவிலிலேயே தேங்கிகொண்டது என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால், கல்வெட்டுகள் எழுத தொடங்கிய போது தான் இன்று எப்படி நம்மிலே பலர் ஆங்கிலத்தை கலந்து கலந்து பேசுவது இயல்பாக ஆகிவிட்டதோ அதுபோல கல்வெட்டு எழுத்துக்களிலும் சமஸ்கிருத சொற்கள் இடம்பெற்றன. உதாரணமாக தேவதானம், பிரம்மதேயம், சதுர்வேதி மங்கலம் என்று சில சொற்களைக் கிரந்த எழுத்துக்களில் எழுதினார்கள். சமஸ்கிருதத்திற்கென்று உருவாக்கப்பட்ட எழுத்துக்கள் கிரந்த எழுத்துக்கள். அவற்றில் தான் எழுதினார்கள் எனவே, சமஸ்கிருத மேலாண்மை என்பது தமிழ்நாட்டில் எந்த காலத்திலும் இல்லை.

பிராமணர்கள் எதற்காக ஆதித்த கரிகாலனை கொலை செய்ய வேண்டும்?

ஆதித்த கரிகாலனின் கொலை குறித்து பேசும் போதெல்லாம் பிராமணர்களை மட்டும் குறிப்பிட்டு பேசுகிறார்கள். கரிகாலனைக் கொலை செய்தது முழுக்கவே பிராமணர்கள் என்று சொல்ல முடியாது. அந்த கொலையில் பலரும் ஈடுபட்டு இருக்கிறார்கள். அவர்களுக்கு எப்படிபட்ட தண்டனை ராஜராஜனால் கொடுக்கப்பட்டது என்பதற்கான கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. உடையார்குடி கல்வெட்டைச் சான்றாகச் செல்லலாம். ராஜராஜனின் மெய்க்கீர்த்தி தொடங்கும் போதே காந்தளூர் சாலை களமறதருளி என்று வரும்.

அந்தச் காந்தளூர் சாலை என்பது இப்போதைய ஆய்வாளர்களின் கருத்துப்படி படை வீரர்களைத் தயார் செய்கிற ஆயுதப் பயிற்சி கூடமாக, ராணுவ பள்ளியாக செயல்பட்டு இருக்க வேண்டும். இந்த ராணுவ பள்ளி செயல்பாட்டால் சோழ நாட்டிற்கு அடிக்கடி படையெடுப்புகள் நடந்தபடியே இருக்கும். தொடர்ந்து மோதல் இருந்து கொண்டே இருக்கும். அவ்வாறாக காந்தளூர்ச் சாலை என்பது ஒரு ராணுவ பயிற்சி பள்ளியாக இருக்கிறது. அதை நாம் முதலில் அழித்தால்தான் அங்கிருந்து தொடர்ந்து வீரர்கள் வருவதற்கு வாய்ப்பில்லாம் போகும் என்பதற்காக காந்தளூர் சாலையை அழித்திருக்கிறார் ராஜராஜன். காந்தளூர் சாலை என்பது பிராமணர்களுக்கென்றே உருவாக்கப்பட்ட ஒரு பள்ளியாகக் கூட இருக்கலாம். அங்கே பயிற்சிகள், வேதங்கள், உபநிஷத்துக்கள் போன்றவற்றோடு போர்க்கலையும் சொல்லிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. எனவே, அந்த காந்தளூர் சாலையை ராஜராஜன் ஒழித்தார். காரணம் அங்கிருந்து வந்தவர்கள் மூலமாகத்தான் ஆதித்த கரிகாலன் கொலை செய்யப்பட்டிருக்க கூடும் என்ற சந்தேகத்தின் காரணமாகவே காந்தளூர் சாலையை அழித்தார். ஆனால், ஒரு சிலர் செய்த தவறுக்காக அனைத்து பிராமணரையும் அவர் தண்டிக்கவில்லை. அதற்குப் பின்னர் தான் பிரம்மதேயங்கள் அதிகமாகக் கொடுத்திருக்கிறார். 'தவறு செய்தவர்கள் யாராக இருந்தாலும் தண்டிக்கப்பட வேண்டியவர்கள் தான். அதற்காக ஒட்டுமொத்த சமூகத்தையே தண்டிக்கக்கூடாது' என்பதில் ராஜராஜசோழன் தெளிவாக இருந்திருக்கிறார்.

ராஜராஜ சோழன் கட்டிய பெரிய கோவில் கொள்ளை அடிக்கப்பட்ட பணத்தைக்கொண்டே கட்டப்பட்டதாக கூறப்படுகிறதே...

இப்படி ஒரு பார்வையே தவறானது. அவ்வாறு பார்க்க கூடாது. ரஷிய அதிபர் தோழர் குருஷேவ் தாஜ்மஹாலை பார்த்த போது, "இதை கட்டுவதற்கு எத்தனை ஆயிரம் தோழர்களின் ரத்தம் பாய்ச்சப்பட்டு இருக்கும்?" என்று கேட்டதாகக் கூறுவார்கள். அது குருஷேவுடைய பார்வை. ஆனால், என்னைப் பொறுத்த அளவில் கோவில்கள் கொள்ளையடிக்கப்பட்ட சொத்துக்களால் அல்லது எங்கிருந்தோ கொண்டு வந்த சொத்துக்களால் கட்டப்பட்டவை இல்லை என்பதுதான். மாறாக சில சிற்பங்களை வெளியிலிருந்து கொண்டு வந்தார்கள் என்று சொல்லலாம். நமது பகுதியில் இல்லாத வழிபாட்டு முறை என்று பாலா பாணி அம்மன் வழிபாடு போன்றவற்றை சொல்வார்கள். அம்மன் வழிபாட்டை போன்ற இந்த காளி வழிபாட்டுச் சிற்பங்கள் தமிழ்நாட்டிலே அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்தபோது வடக்கில் இருந்து சில சிற்பங்களை ராஜேந்திர சோழன் கொண்டு வந்து கங்கைகொண்ட சோழபுரத்திற்குப் பக்கத்திலேயே காட்சிப்படுத்தியிருக்கிறார். அதுபோல துவாரபாலகர் சிற்பம் என்ற சிற்பத்தை ராஜேந்திரனின் மகன் கொண்டு வந்து தாராசுரத்திலே காட்சிப்படுத்தியிருக்கிறார். அப்படி மிக அரிதான சிற்பங்களை இங்கே கொண்டு வந்து தமிழ் மக்களுக்குக் கோவிலிலே காட்சிப் படுத்தியிருக்கிறார்களே தவிர பெரும் செல்வத்தை கொள்ளையிட்டு கோவிலை கட்டினர் என்று சொல்வதற்கில்லை.

நமது நாட்டில் வளங்கள் நிரம்ப இருக்கின்றன. முதலில் சொன்னது போல கோவில் என்பது வழிபாட்டிற்காக மட்டும் கட்டப்பட்டது அல்ல. கோவில் ஒரு நிர்வாக இயந்திரம். ஊரிலே ஒரு கோவில் இருந்தது என்று சொன்னால் பலவிதமான தொழில்கள் அங்கே பெருகுகின்றன என்று பொருள். நான் ஏற்கனவே சொன்னது போல தஞ்சைப் பெரிய கோவிலில் 1100 பேருக்கு வேலை வாய்ப்பு கிடைத்திருக்கிறது. அப்படி என்றால் எவ்வளவு பெரிய நிறுவனமாக அந்த கோவில் செயல்பட்டு இருக்க வேண்டும்? எவ்வளவு வருவாய் வந்திருக்க வேண்டும். எவ்வளவு நிலங்கள் அதற்கு சொந்தமாக இருந்திருக்க வேண்டும். அவை பற்றிய, செல்வ வளங்கள் குறித்த பதிவு கிடைத்திருக்கிறது. எனவே, கோவில் என்பது ஒரு கிராமத்தின் நிர்வாக அமைப்பு. இன்று ஒரு வருவாய் துறை அலுவலகம், ஒரு மாவட்ட அலுவலகம் போல செயல்பட்டிருக்கிறது. கோவில் நிர்வாகத்தின் மூலம் பல்வேறு சமூக மக்களுக்கு வேலை வாய்ப்பு



கிடைத்திருக்கிறது. விவசாயிகளுக்கு நிலங்களைப் பிரித்துக் கொடுத்திருக்கிறார்கள். கால்நடை மேய்ப்பவர்களுக்கு அங்கு சேரக்கூடிய ஆடுகளைச் சாவாமூவா முக பேராடு என்று சொல்வார்கள் அவற்றை பகிர்ந்து கொடுத்திருக்கிறார்கள். பொன்னும் பொருளையும் வங்கிகளிலே சேர்த்து வெள்ளம் பஞ்சம் போன்ற காலங்களில் மக்களுக்கு உதவி செய்திருக்கிறார்கள். மேலும், வங்கிகளாக செயல்பட்டு வட்டிக்கு கொடுத்திருக்கிறார்கள் அதேபோல ஆடற்கலைஞர்களுக்கு, கூத்தர்களுக்கு பணி, எழுத்தர்களுக்குப் பணி, கணக்கர்களுக்குப் பணி என்று சமூகத்தின் அனைத்துத் தரப்பு மக்களையும் ஒருங்கிணைத்து செல்லக்கூடிய வேலைவாய்ப்பு நிறுவனமாகவும் ஒரு கோவில் செயல்பட்டு இருக்கிறது. எனவே, தமிழக வரலாற்றில் கோவில் என்பது தவிர்க்க முடியாத ஒரு நிர்வாக அமைப்பாகவும் வழிபாட்டுத் தலமாகவும் இருந்திருக்கிறது என்று தான் பார்க்க வேண்டுமே தவிர இன்றைய கண்ணோட்டத்தில் பார்ப்பது என்பது பலவிதமான விமர்சனத்தை தான் உண்டாக்கும்.

சோழர் ஆட்சியில் அடிமை முறை இருந்ததா...?

எல்லா ஆட்சிகாலத்திலும் அடிமை முறை இருந்தது. அடிமை முறை என்றால் தங்களைத் தாங்களே அடிமையாகக் கொடுத்துக் கொள்வது அல்லது வேறு சிலருக்கு அடிமையாக விற்பனை செய்வது. கடந்த 18ஆம் நூற்றாண்டு வரை இந்த அடிமை முறை இருந்தது என்பதற்கு கல்வெட்டு சான்றுகளும் ஓலைச்சுவடி சான்றுகளும் இருக்கின்றன.

மூவேந்தர் ஆட்சி காலத்தில் இருந்து தான் தமிழகத்தில் தீண்டாமை புழக்கத்தில் வந்ததாக ரொமிலா தாப்பர் குறிப்பிடுகிறார். குறிப்பாக சோழர்களின் நிலை என்ன...?

வேளாண் குடி மக்கள், போர்க்குடி மக்கள் என்று தான் பார்க்கப்பட்டார்கள். சாதி என்ற சொல்லாடலே சோழர் காலத்தில் தான் வருகிறது. குறிப்பாக ராஜராஜ சோழன் கல்வெட்டில் தான் பறைச் சுடுகாடு, பள்ளச் சுடுகாடு, வேளாண் சுடுகாடு என்று வெவ்வேறு சமூகத்தைச் சேர்ந்தவர்களின் சுடுகாடுகள் இருந்திருக்கின்றன என்று அறிகிறோம். 'தீண்டாதார்' என்ற வார்த்தை பாண்டிய நாட்டை பொருத்தவரையில் 13ஆம் நூற்றாண்டு கல்வெட்டில் அதாவது உத்தரகோசமங்கை கல்வெட்டில்தான் வருகிறது. தீண்டாதார் என்றுதான் வருகிறதே தவிர என்ன சாதி என்ற விபரம் அதில் இல்லை. ஆனாலும் கூட புறஞ்சேரி என்ற வார்த்தை சிலப்பதிகார காலத்தில் வருகிறது. மதுரையிலே முக்கியமான நகரம் மைய நகரம் என்று ஒன்று இருந்தது. அதைத் தாண்டி புறஞ்சேரி ஒன்று இருந்தது. அந்தப் புறஞ்சேரியில் வாழ்ந்தவர்கள் யார் என்று நாம் சரியாகச் சொல்ல முடியாது. இடைக்குல மடந்தை என்று சொல்லக்கூடிய மாதுரி யிடம் கண்ணகியை அடைக்கலமாக வைத்தார்களே அவர்களே கூட புறஞ்சேரியில் வாழ்ந்தார்கள் என்று பார்க்கிறோம். எனவே, தீண்டாமை, தீண்டாதார் என்ற சொற்கள் 10ஆம் நூற்றாண்டிற்கு பிறகு வந்த சொல்லாடல்கள்தான்.

நிலங்களைப் பறிப்பது, அடிமை முறை விபச்சாரம் பெண்களை வலுக்கட்டாயமாக தூக்கிச் சென்று தேவரடியாராக மாற்றுவது என்றெல்லாம் பேசப்படுகிறதே. இது உண்மையா...?

இவை யாவும் ஆதாரமற்ற கட்டுக்கதைகள். நிலங்களை வெவ்வேறு பணிகளுக்காக மாற்றி கொடுத்திருக்கிறார்கள். பிராமணர்களுக்குக் கொடுத்தது போல வேளாண்மை நிலங்களை சிலருக்குப் பணிகளுக்காக கொடுத்து இருக்கிறார்கள். குறிப்பாக தேவரடியார்களுக்கும் கொடுத்து இருக்கிறார்கள். தச்சர்களுக்கு கூலியாக நிலங்களை கொடுத்திருக்கிறார்கள். வேலை வாங்கிக் கொண்டு நிலங்களைக் காணியாக கொடுக்கும் வழக்கமும் இருந்தது. வலுக்கட்டாயமாக நிலங்களைப் பறித்தார்கள் என்று கூறுவது ஆதாரமற்ற செய்தி. பெண்களுக்கு அதாவது தேவரடியார்களுக்கு அடையாளம் இடும் முறை இருந்தது. அதாவது, வைணவ கோவிலைச் சார்ந்த தேவரடியார் என்றால் சக்கரத்தை அவரது உடலில் அடையாளமாக இடுவதும் சைவ கோவிலை சேர்ந்த தேவரடியார் என்றால் திரிசூலத்தை அடையாளமாக சூடு இடுவதும் வழக்கமாக இருந்திருக்கின்றன. ஒரு பெண் கோவில் பணியை விட்டு விலகி வேறு ஊருக்கு சென்று இந்த

முத்திரையின் மூலமாக தேவரடியாள் என்று தன்னை அடையாளப்படுத்தி பணிக்கு சேருகிற வழக்கம் இருந்தது. இந்த முத்திரையைக் காட்டி வேலை பெற்ற ஒரு செய்தியும் கூட கல்வெட்டிலே இருக்கிறது. இதை நாம் பார்க்கின்ற கண்ணோட்டத்தில் தான் இதன் பொருள் இருக்கிறது. அந்த காலத்து சமுதாயம் அவ்வாறு இருந்தது என்று தான் நாம் பார்க்க வேண்டுமே தவிர, இன்றைய 21ஆம் நூற்றாண்டு கண்ணோட்டத்தில் அதைக் கடுமையாக விமர்சனம் செய்வது நம்மை நாமே ஏமாற்றிக்கொள்வது போலாகும். இது நம்மை நாமே இழிவுபடுத்திக் கொள்வதாகும்.

**தேவரடியார்கள் என்றால் என்ன?**

தேவரடியார்கள் என்றால் தேவர்களுக்கு தொண்டு செய்வது என்று பொருள். அதில் ஆண்களும் உண்டு, பெண்களும் உண்டு. எனவே, கோவில்களில் என்னென்ன பணிகள் செய்வார்களோ அவர்கள் தேவரடியார்கள் என்று அழைக்கப்பட்டனர். அவர்களுக்கு ஊதியம் உண்டு. பட்டச்சோறு அதாவது சட்டிச்சோறு கொடுப்பார்கள். நிலங்களைக் கொடுப்பார்கள். வீடுகளும் கொடுத்து இருக்கிறார்கள். எனவே, தேவர்களுக்குத் தொண்டு செய்பவர்கள் தான் தேவரடியார்கள். பின்னால் அது கொஞ்சம் கொஞ் சமாக அதாவது ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு தேவதாசி முறை என்றாகி விட்டது. ஆரம்பத்தில் தூய்மையான சொல்லாகவும் தூய்மையான கோவில் பணி செய்யக்கூடிய தொண்டூழியர்களாகவும் தான் அவர்கள் இருந்தார்கள்.

**சோழர்களின் ஆட்சியைப் பொற்கால ஆட்சி என்றும் அது ஓர் முற்போக்கான ஆட்சி, ஜனநாயக பண்போடு சோழர்கள் இருந்தனர் என ஒரு தரப்பு வாதிடுகின்றனரே...**

பொற்கால ஆட்சி என்று சொல்வதையும் நான் ஏற்றுக்கொள்வதில்லை. மாறாக சோழர்களின் ஆட்சி ஒரு வலிமையான ஆட்சி என்று நான் சொல்லுவேன். நானூறு ஆண்டு காலம் தமிழகம் முழுமையும் ஒரு குடையின் கீழ் ஆண்ட ஆட்சியாக சோழருடைய ஆட்சி இருந்தது. அதுபோல வரி விதிப்பதற்காக நாட்டையே முழுமையாக அளந்து மண்டலங்களாக கோட்டங்களாக, நாடுகளாக, கிராமங்களாகப் பிரித்து அவற்றிற்கான வரி வசூலை ஒழுங்குபடுத்தி, முறையான வரி வசூலை செய்தனர். கோவில்களில் தவறு நடந்தால் தணிக்கை செய்யப்பட்டிருக்கிறது. இவ்வாறாக நிர்வாக முறையைக் கட்டமைத்து ஸ்திரமிக்க ஆட்சியை கட்டமைத்ததற்கு சோழர் காலத்தைத்தான் நாம் எடுத்துக்காட்டாக கொள்ள வேண்டும். பல்வேறு பணிகள் செய்யப்பட்டு இருக்கின்றன. தமிழகம் எங்கும் நிறைய கோவில்கள் கட்டப்பட்டன. ஒரு ஊரை நிர்வாகம் செய்வதற்கு நிர்வாக அமைப்பாக கோவிலை வைத்துக்கொண்டு சோழர்கள் நிர்வகித்தனர்.

**சோழர்கள் குறித்துப் படிக்கும் போது அனிருத்த பிரம்மராயர், பரகேசரி, ராஜ ராஜ சோழ ராஜகேசரி என்று படிக்க வேண்டி உள்ளது. இந்த பரகேசரி என்பதற்கு பொருள் என்ன?**

பரகேசரி என்பது சமஸ்கிருதச் சொல். கேசரி என்றால் சிங்கம் என்று பொருள். பரகேசரி என்றால் வேற்று நாட்டு மன்னர்களுக்கு சிங்கம் போன்றவன் என்று பொருள். ராஜகேசரி என்றால் ராஜாக்கள் பலருக்கும் சிங்கம் போன்றவன் என்று பொருள். தன்னை உயர்த்திச் சொல்வதற்கான பட்டம் இது. சோழர்களுக்கு உரியது. அப்பா பரகேசரி என்றால் மகன் ராஜகேசரி என்று பட்டம் சூட்டி கொள்வான். அதே போல பாண்டியர்களும் மாறவர்மன், சடையவர்மன் என்ற பட்டத்தை சூட்டிக் கொள்வர். அது மாதிரியான ஒரு பட்டம் தான் இந்த பரகேசரி.

**ஒரு தொல்லியல் ஆய்வாளராக மூவேந்தர்களின் சாதி குறித்து உங்கள் பதில் என்ன...?**

மூவேந்தர்கள் பற்றிய சாதி தகவல்கள் எந்த கல்வெட்டிலும் இல்லை. அவர்கள் தங்களைச் சத்திரிய சிகாமணி என்று தான் சொல்லிக் கொண்டனர். சத்ரிய சிகாமணி என்றால் போர் வீரர்களில் மணி போன்றவன் என்று பொருள். சத்திரிய சிகாமணி வளநாடு என்று தான் ஆண்ட பகுதிக்கு பெயர் சூட்டினர். எனவே, தங்களை, மன்னர் மரபு என்பதை, நால்வர்ண பகுப்பிலே சத்திரியர்கள் என்றுதான், அதாவது ராஜாக்கள் என்று சொல்லிக்கொண்டதால், இவர்கள் தங்களை சத்திரிய பரம்பரை என்று சொல்லிக்கொண்டனர். என்ன சாதி என்று வெளிப்படையாக மூவேந்தர்கள் காட்டிக் கொள்ளவில்லை. நாம் அடையாளப்படுத்தவும் முடியாது.

**தற்போது கீழடியில் கிடைத்த தமிழ் எழுத்துக்களை எந்த நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருத முடிகிறது?**

தமிழ்நாடு அரசின் தொல்லியல் துறை தற்போது கீழடியில் நான்காம் கட்டமாக மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகள் குறித்த ஓர் அறிக்கையை வெளியிட்டு இருக்கிறது. அந்த அறிக்கையில் கிடைத்த பானை ஓட்டு பொறிப்புகளை கால கணிப்புக்கு உட்படுத்தி புளோரிடா மாநிலத்தில் உள்ள பீட்டா அனலிசிஸ் முறையில் ஆய்வு செய்து ஒரு முடிவைப் பெற்று இருக்கிறது. அதன்படி கிமு 580 காலத்தில் அதாவது இன்றைக்கு சுமார் 2600 ஆண்டுகளுக்கு முந்தைய சான்றுகள் என்று தெரிவித்திருக்கிறார்கள். எனவே, அவர்களால் சொல்லப்படுகிற அறிக்கையின் அடிப்படையில் சுமார் 2600 ஆண்டுகளுக்கு முன்பு அந்த தமிழ் எழுத்துக்கள் எழுதப்பட்டவை என்று உறுதியான முடிவுக்கு வருகிறோம்.



**கீழடியில் கிடைக்கப்பெற்ற தடயங்களின் மூலம் வணிக தொடர்பு பற்றி எம்மாதிரியான முடிவுக்கு வர முடிகிறது?**

அந்த தடயங்களில் சில ரோமானியப் பானை, ஓடுகள் கிடைத்திருக்கின்றன. அதோடு வேறு சில பானை ஓடுகள், சூது பவள மணிகளால் செய்யப்பட்ட சில மாலைகள் போன்ற பொருள்கள் கிடைத்திருக்கின்றன. சூது பவள மணியின் மூலக் கற்கள் தமிழ்நாட்டை சேர்ந்ததில்லை. அவையெல்லாம் குஜராத் போன்ற பகுதிகளில் இருந்துகொண்டுவரப்பட்டவை. எனவே, அங்கிருந்து கொண்டுவரப்பட்ட கற்களாக, மணிகளாக இருக்கலாம். ரோமானியப் பானை ஓடுகளைக் கொண்டு ரோமானியர்களோடு தமிழர்களுக்கு வணிகம் இருந்தது என்பதை உறுதியாக அறிகிறோம்.

**இயக்குனர் பா. ரஞ்சித் கூறிய குற்றச்சாட்டு அல்லது கருத்து என்று கூட வைத்துக்கொள்வோம். அதற்கு ஆதாரம் இருக்கிறதா...**

நிலங்கள் பறிக்கப்பட்டதற்கு ஆதாரம் எதுவும் இல்லை. சில நிலங்களை பிராமணர்களுக்கு கொடுத்து இருக்கிறார்கள். ஏற்கனவே உரிமைபட்ட, ஒருவரின் நிலத்தை எடுத்து வேறு ஒருவரிடம் கொடுத்திருப்பதையும் அறிய முடிகிறது. உதாரணத்திற்கு ஒன்று சொல்கிறேன். இன்று தஞ்சாவூரில் பூண்டி வாண்டையார் கல்லூரி இருக்கின்ற பகுதியில் 1008 ஆந்திர பிராமணர்களுக்கு லோகமா தேவி சதுர்வேதி மங்கலம் என்ற பெயரில் ஒவ்வொருவருக்கும் சுமார் எட்டு ஏக்கர் வீதம் 1008 பேருக்கு கொடுத்திருக்கிறார்கள். இது மாதிரி பல சதுர்வேதி மங்கலங்கள் தமிழ்நாட்டில் இருக்கின்றன. இவை யாவும் பிராமணர்களுக்காக கொடுக்கப்பட்ட பிரம்மதேயங்கள், சதுர்வேதி மங்கலங்கள். இவற்றைக் கணக்கிட்டால் குறைந்தபட்சமாக தமிழ்நாட்டில் 600 இடங்களாவது தேறும். தமிழ்நாடு முழுவதும் இவை போன்று பிராமணர்களுக்கு கொடுக்கப்பட்ட நிலப்பகுதிகள் உண்டு. ஒருவர் விவசாயம் செய்து கொண்டிருந்த நிலத்தை இன்னொருவருக்கு மாற்றி கொடுக்கப்பட்டிருக்கிறதே தவிர பறிமுதல் செய்ததில்லை. அவ்வாறு மாற்றி கொடுக்கின்றபோது குடி நீக்கி கொடுப்பது குடி நீங்கா கொடுப்பது தேவதானம் என்றெல்லாம் சொல்வார்கள். குடி நீங்கி உழுபவர்கள் அதாவது நிலமற்றவர்கள் உடல் உழைப்பாளர்கள் இருக்கிறார்கள் அல்லவா அவர்களையும் சேர்த்தே தேவதானமாக கொடுப்பதாகும். குடி நீங்கா தேவதானம் என்று சொன்னால் நீ உனக்கு இஷ்டப்பட்டவர்களை வைத்துக்கொண்டு வேலை செய் என்பதாகும்.

ரஞ்சித் சொல்வது ஒரு பகுதி உண்மை. பள்ளர், பறையர் மக்களின் நிலங்களை பறித்துக் கொடுத்ததாக பொருள் கொள்ள முடியாது. இது போன்ற பிரம்மதேயங்கள் ராஜராஜ சோழன் மட்டும் செய்யவில்லை பல்லவர் காலத்திலேயே பிரம்மதேயங்கள் வந்துவிட்டன. இன்னும் சொல்லப்போனால் சங்க காலத்திலேயே பிரம்மதேயங்கள் என்ற சொல் வந்து விட்டன. அந்த காலத்தில் இருந்து பிரம்மதேயங்கள் நிலக்கொடைகள் வருகின்ற நமது பாண்டிய நாட்டு பகுதியிலே வேள்விக்குடி, தளவாய்புரம், இளையான்புத்தூர் செப்பேடுகள் இந்த மூன்று செப்பேடுகளும் இதைத் தான் சொல்கின்றன. ஏற்கனவே நிலங்களை யார் வைத்திருந்தார்களோ அவர்களிடத்திலிருந்து பறித்து வேறு பிராமணர்களுக்கு கொடுத்தபோது அவர்கள் கொந்தளித்துக் கொண்டிருந்தார்கள். வாய்ப்பு வரும்போது கைப்பற்ற முயற்சி செய்கிறார்கள் அதைத்தான் வேள்விக்குடிச் செப்பேட்டில் பார்க்கிறோம். எனவே, இது ராஜராஜ சோழன் மீது மட்டும் சுமத்தக்கூடிய குற்றச்சாட்டு அல்ல, தமிழ்நாட்டில் மூவேந்தர்கள் மீதும் இந்த குற்றச்சாட்டுக்கு இடம் உண்டு.

**கீழடியில் உள்ள தடயங்களின் வழியாக அன்றைய மக்களின் தொழில் குறித்து எம்மாதிரியான முடிவுக்கு வரலாம்...**

இப்போதைக்குக் கிடைத்த தகவல்களைக் கொண்டு நெசவு தொழிலை செய்திருக்க வேண்டும் என்பதான முடிவுக்கு வர முடிகிறது. அவை தவிர

சுடுமண்ணல் ஆன பொம்மைகள் காதணிகள், சங்கு வலையல்கள் கிடைக்கின்றன. கைத்திறன் தொழிலை அவர்கள் செய்திருக்கின்றனர். ஜவுளி தொழிலுக்கான உபகரணங்கள் தயாரிக்கப்பட்டன என்றும் நாம் முடிவுக்கு வர முடிகிறது.

வேளாண்மை மட்டும் பிரதானமான தொழிலாக கொண்டு வாழ்ந்ததாக முடிவுக்கு வரலாமா

அந்த இடத்தை பொறுத்த அளவில் நமக்கு கிடைத்த சான்றுகளில் வேளாண்மைக்கான சான்று எதுவும் இல்லை இதுவரை வெளிப்படவும் இல்லை

வழிபாட்டுத்தடயங்கள் கிடைக்கப்பெற்றதா?

தமிழ்நாட்டில் இதுவரை மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் எந்தவிதமான சமய வழிபாட்டு சான்றுகளும் கிடைக்கவில்லை. அதாவது சங்ககாலம் என்று சொல்லக்கூடிய 2600 ஆண்டு காலம் என்ற வரையறையை நாம் இப்போது வைத்துக்கொண்டால் அந்த காலத்தில் எந்தவித சமய சான்றுகளும் நமக்கு கிடைக்கவில்லை. அதற்கு மாறாக வேறு சில இடங்களில் அகழாய்வு செய்த போது சூடு மண்ணால் செய்யப்பட்ட பெண் தெய்வ உருவங்கள் கிடைத்திருக்கின்றன அவற்றின் காலத்தை கி.மு. பத்து அல்லது ஒன்பது என்று வரையறை செய்திருக்கிறோம் எனவே, இப்போது கீழடியை பற்றி மட்டும் சொல்வோமானால் இதுவரை எந்த சமய சான்றுகளும் கிடைக்கவில்லை. ஆதிச்சநல்லூரில் சங்க காலத்திற்கு முன்பே பெண் தெய்வ உருவம் கிடைத்துள்ளது.

தமிழின் தொன்மை குறித்து இதுவரை நிலவி வந்த கருத்துக்களுக்கு கீழடி எந்த வகையில் நமக்கு உறுதியான சான்றாக அமைந்துள்ளது......

தமிழின் தொன்மை குறித்து 2004 வரை நாம் கொண்டிருந்த கருத்து என்னவென்றால் வட இந்தியாவில் இருந்து வந்த சமண துறவிகள்தான் தமிழ்நாட்டிற்கு எழுத்தை கொடுத்தார்கள் என்று கருதினோம் ஆனால், 2004இல் புலிமான் கோம்பை கல்வெட்டு கண்டறியப்பட்ட பின்னர் அந்த கருத்து மறுக்கப்பட்டது. புலிமான் கோம்பையில் மூன்று நடுகற்கள் கிடைத்திருக்கின்றன. அவை சாமானிய மக்களின் இறப்பு சடங்குகளோடு தொடர்புடையவை. அதில் எந்தவிதமான வட சொற்களும் இல்லை. தனி தமிழில் எழுதப்பட்டவை. இதனுடைய காலத்தை கிமு 4ஆம் நூற்றாண்டு என்று வரையறை செய்கிறோம் அதற்குப் பிறகுப் பொருந்தல் அகழாய்விலேயே கிடைத்த எழுத்து பொறிப்பு கிமு 490 காலத்தைச் சேர்ந்தது என்று அமெரிக்கா ஆய்வின் முடிவை பெற்ற போது, கிமு 500 என்று முடிவு செய்தோம். அதற்குப் பிறகு நடைபெற்ற கொடுமணல் அகழாய்வில் 500க்கும் மேற்பட்ட பானை ஓடுகளிலேயே தமிழில் எழுதப்பட்ட குறிப்புகள் இருக்கின்றன. அவற்றில் சிலவற்றை அமெரிக்க நிறுவனத்திற்கு அனுப்பி முடிவுகள் எட்டப்பட்ட போது, கிமு 450 வாக்கில் இந்த எழுத்துக்கள் எழுதப்பட்டன என்ற ஒரு முடிவைப் பெற்றோம். அவற்றை எல்லாம் மாற்றுகின்ற வகையிலே இப்போது கீழடியில் நாலாம் கட்ட அகழாய்வில் கிடைத்த எழுத்துச் சான்றுகள் சுமார் கிமு 6ஆம் நூற்றாண்டுக்கு அதாவது 580 ஆண்டு வாக்கில் இவை எழுதப்பட்டன என்ற ஒரு கருத்தை கொடுத்திருக்கிறது ஒரு நெடிய போராட்டத்திற்குப் பிறகு 10 ஆண்டுகள் ஆய்வுக்குப் பிறகு நாம் மிக தொன்மையான எழுத்துக்கள் கிமு 6-ம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்று நாம் கருதுகிறோம்.

இப்போது தமிழ் மொழி அதற்கு முன்னதாகவே பேச்சு வழக்கில் இருந்திருக்க வேண்டும் அல்லவா...

நிச்சயமாக ஒரு மொழி எழுத்து வடிவம் பெறுவதற்கு முன்பாக பேச்சு வழக்கில் இருந்திருக்கும். தொகுக்கப்பட்ட சங்க பாடல்கள் எல்லாம் வாய்மொழிப் பாடல்களாக பாடப்பட்டு பிறகு எழுதப்பட்டு தொகுக்கப்பட்டிருக்கின்றன. உலகில் பல்வேறு தொன்மையான மொழிகளில் உள்ள இலக்கியங்கள் எல்லாம் குறிப்பாக இலியாத், ஒடிசி போன்ற எகிப்து ரோமானிய இலக்கியங்கள் எல்லாம் வாய்மொழி பாடல்களாக இருந்தவை தான் என்பதை மேலைநாட்டு அறிஞர்கள் சொன்னதை மேற்கோள் காட்டி பேரறிஞர் கைலாசபதி சொல்லி இருக்கிறார். தமிழ் சங்கப் பாடல்களும் வாய்மொழி பாடல்களே என்பதை ஒப்பியல் இலக்கிய துறைகளிலே பணி செய்த தமிழண்ணல், கதிர் மகாதேவன் போன்ற பேரறிஞர்கள் நிறுவி இருக்கிறார்கள். எனவே, அந்த வகையில் பார்த்தால் பேச்சு வழக்கு நெடுங்காலம் இருந்திருக்கிறது. பிறகு கல்வி அவர்களுக்கு கிடைத்திருக்கிறது, கல்வியின் மூலமாக பாடல் புனையப்படும் அளவுக்கு ஞானம் பெற்று இருந்திருக்கிறார்கள். நமது கருத்துப்படி கிமு 6ஆம் நூற்றாண்டிலேயே சாமானிய மக்கள் மத்தியில் எழுத்து இருந்திருக்கிறது. அது மிக முக்கியம். பானை ஓட்டு குறிப்புகள் அரசர்களுடையதோ செல்வந்தர்களுடையதோ அல்ல; மிகப் பெரிய செல்வந்தர்கள் பயன்படுத்தியதும் அல்ல. சாமானிய மக்களுடைய பயன்பாட்டில் இருந்திருக்கிறது. எனவே, மிகத் தொன்மையான எழுத்தறிவுக்கு உரியவர்கள் தமிழர்கள் என்பதை இதன் மூலம் அறிகிறோம்.

கீழடியில் கிடைத்த சான்றுகளை வைத்து வேளாண்மை மட்டுமே தொழில் என்ற முடிவுக்கு வரலாமா?

முடியாது. ஆதியில், கற்காலத்தில் வாழ்ந்த போது வேட்டை தொழிலில் இருந்தார்கள். புதிய கற்காலம் என்று வருகிறபோது மீன்பிடித்தொழிலோடு வேளாண்மை தொழிலையும் செய்தார்கள். அதற்குப்



பிறகு உருவான இரும்புக்காலத்தில் இரும்பின் பயன்பாடெல்லாம் வருகின்ற போது பல்வேறு தொழில்கள் உருவாயின. வேளாண்மை உப தொழிலாகவும் குடிசைத் தொழிலாகவும் மாறியது. இவை பற்றி நமக்கு சங்க இலக்கியங்களில் ஏராளமான சான்றுகள் இருக்கின்றன.

**வழிபாடு அற்ற சமூகம் தான் இருந்திருக்கும் என்ற முடிவுக்கு வர முடியுமா...**

தங்களுடைய மூதாதையர்களைத்தான் வழிபட்டனர். தாய் தெய்வங்களை வழிபட்டார்கள். தங்களுக்காக உயிர் நீத்த வீரர்களை வழிபட்டார்கள். புறநானூறு 335ஆவது பாடலிலே 'கல்லே பறவையின் பரவின் அல்லது நெல்லுக்குத்துப் பரவும் கடவுளும் இலமே' என்று ஒரு தொடர் வருகிறது. நாங்கள் நடுகல்லைத் தவிர வேறு எந்த கல்லுக்கும் எந்த தெய்வத்துக்கும் எந்த கடவுளுக்கும் நெல் அல்லது அரிசி அல்லது உணவு சமைத்து வழிபடுவதில்லை என்று அறிகிறோம். எல்லோரும் என்று சொல்ல முடியாது. ஒரு குறிப்பிட்ட மக்கள் அப்படிப்பட்ட பண்பாட்டுக்கு உரியவர்களாகவே இருந்திருக்கிறார்கள். ஆதிச்சநல்லூர் அகழாய்வுகளே மிகத் தொன்மையானது. 1904இல் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில்கூட வயிறுபுடைத்த ஒரு தாயின் உருவம் தான் கிடைத்திருக்கிறது. எனவே, வீர வழிபாட்டுக்குரியதாக சமூகத்தை, மூதாதையரை வழிபட்ட மக்களாக இருந்திருக்கின்றனர். இப்போது நாம் பார்க்கக்கூடிய தெய்வங்கள் அப்போது இல்லை.

**கீழடியில் சமயம் குறித்து நமக்கு ஏதும் தடயம் கிடைத்திருக்கிறதா...?**

இதுவரை கிடைக்கவில்லை. இந்த ஆழத்திற்கு மேல் கிடைக்காது. தெய்வ உருவங்கள் கிடைக்க வேண்டும் என்று சொன்னால் மேல் அடுக்குகளில் அதாவது 10, 8 நூற்றாண்டு அடுக்குகளில் கிடைக்க வாய்ப்பு உண்டு. தாய் உருவம், பால் குடிக்கின்ற குழந்தை உருவம் உள்ள உருவங்கள் கிடைக்கலாம். வேறு சில உருவங்கள் கிடைக்கக்கூடும். ஆனால், தமிழ்நாட்டில் இதுவரை அகழாய்வுகளில் சமயம் சார்ந்த வழிபாடு சார்ந்த தடயங்கள் இதுவரை வெளிப்படவில்லை.

**வைகைக் கரை தமிழ் பண்பாடு என்று கீழடி நாகரீகத்தை பெயர் வைத்திருப்பது பற்றி உங்கள் கருத்து என்ன...**

பெயர் வைப்பதில் தவறில்லை. ஏனென்றால், எல்லாமே நதிக்கரை நாகரிகங்கள் தான். வைகைக் கரையில் இப்படியான பரந்துபட்ட விரிவான நாகரீகம் இருந்திருக்கின்றது. எழுத்து அறிவு பெற்ற பண்பாட்டுச் செழுமை மிக்க நாகரீகம் இருந்திருக்கிறது. வைகைக்கரை முழுவதும் 293 இடங்களில் தொல்லியல் எச்சங்கள் இருக்கின்றன என்று கணக்கிட்டு குறிப்பாக இப்போது நாம் கீழடியை பார்க்கின்றபோது புள்ளிமான் கோம்பை கூட வைகை நதியின் கரையில் தான் இருக்கிறது. எனவே, அவ்வாறு வைகை நாகரிகம் என்று பெயரிடுவதில் எந்த தவறும் இல்லை.

**கீழடி ஆய்வுகள் குறித்து பல்வேறு அரசியல் பேசப்படுகிறது. முக்கியமாக கீழடியை குறிப்பிட்டு பேசும்போது திராவிடம் என்று சொல்லாடலை பேசுகிறார்களே, இது ஏற்கக் கூடியதுதானா?**

என்னை பொறுத்த அளவில் தமிழர் நாகரீகம் என்பதே போதுமானதாகும். திராவிடம் என்ற சொல் இந்தியாவில் முதன்முதலில் கி.பி. 1ஆம் நூற்றாண்டில் அறிமுகப்படுத்தப்பட்ட சொல்லாகும். கி.மு. 1ஆம் நூற்றாண்டிலேயே 'சமவயங்க சுத்த' என்ற சமண நூல் எழுதப்பட்டது. அந்த நூலில் இந்தியாவில் இருக்கக்கூடிய 18 வகையான எழுத்துக்களைச் சொல்லுகின்ற போது ஒன்றுபம்மி இன்னொன்று தமிழி என்று சொன்னார்கள். அந்தத் 'தமிழி' என்பது நமது தமிழ்நாட்டில் புழக்கத்தில் இருந்த எழுத்தாகும். அதாவது எழுத்து வகை. ஆனால், கிபி 1ஆம் நூற்றாண்டில் புத்த நூலான லலித விஸ்தரம் என்ற நூலில் 64 வகையான எழுத்து வகைகளின் பட்டியல் இருக்கிறது. அதில் 'தமிழி' என்பது இல்லை. அதற்கு மாறாக திராவிடி என்ற சொல் உள்ளது.




அந்த காலகட்டத்தில் தமிழி என்றாலும் திராவிடி என்றாலும் ஒன்றுதான். தமிழி, தமிழ் என்று உச்சரிக்க முடியாதவர்கள்; அதாவது, ஏற்கனவே பாவாணர் சொன்னது போல, தமிழை தெளிவாக உச்சரிக்க முடியாதவர்கள் தமிழி, திராவிட, திராவிடி என்ற உச்சரித்து இருக்கிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். கி.பி. 1ஆம் நூற்றாண்டை பொறுத்தளவில் தமிழி என்றாலும் திராவிடி என்றாலும் ஒன்றுதான். அதை இப்போதைய கண்ணோட்டத்தோடு ஒப்பிட்டு பேசக்கூடாது. இப்போது தமிழ் தேசியம், திராவிட பண்பாடுபோன்ற ஆய்வுகளின் கண்ணோட்டத்தோடு கருத்தைப் புகுத்த கூடாது. ஏனென்றால் 2000 ஆண்டுகளுக்கு முன்பு தமிழ் தேசியமும் இல்லை, திராவிட கருத்தாக்கமும் இல்லை. தமிழில் இருந்து பிரிந்தது தான் மற்ற மொழிகள் என்பதை அனுபவ ரீதியாக உணர்கிறோம். அதை ஏற்றுக்கொள்வதற்கு பலர் தயங்குகிறார்கள். இன்று தமிழ்நாட்டில் கிடைக்கக்கூடிய கல்வெட்டுகளை போன்று அதற்கு சமமாக கேரளாவிலோ அல்லது கர்நாடகாவிலோ, ஆந்திராவிலோ இவ்வளவு தொன்மையான எழுத்துக் கல்வெட்டு கிடைக்கவில்லை. கேரள பகுதியில் ஒரு சில தமிழி கல்வெட்டுகள் கிடைத்து இருக்கின்றன. ஆனாலும் கூட அங்கிருக்கும் பெருவாரியான படித்த சமூகம் என்று சொல்லக்கூடிய மக்களே நாங்கள் மலையாளிகள் தனியானவர்கள் என்று பிரித்துப் பேசுகிறார்கள். மூவேந்தர்களில் சேரர்கள் தமிழர்கள் என்று நாம் பேசினாலும்கூட இப்போது மலையாளிகள் மற்றும் தமிழைச் சார்ந்தவர்கள் கூட ஏற்றுக்கொள்ளத் தயங்குகிறார்கள்.

அவர்களை விட கர்நாடகக்காரர்களும் ஆந்திரக்காரர்களும் ஒரு தெளிவற்ற முடிவுகளில் இருக்கிறார்கள். அதை நாம் மறுப்பதற்கு இல்லை. ஆனால், அவர்கள் சமஸ்கிருதத்தை தங்களுடைய மொழிகளில் ஏற்றுகொண்டார்கள். தமிழ் தனித்துவம் வாய்ந்த மொழியாக அன்றிலிருந்து இன்று வரை நிலைக்கிறது. அவர்கள் சமஸ்கிருதத்தை ஏற்றுக்கொண்டதால் அவற்றின் மொழி அழிந்துவிட்டது. தனித்தன்மை போய்விட்டது. ஆனால், தமிழர்களின் தனித்தன்மை இன்றும் அப்படியே இருக்கிறது. தமிழிலே வர்க்க எழுத்துக்கள் கிடையாது. வடமொழிக்கும் மற்ற மொழிகளுக்கும் வர்க்க எழுத்துக்கள் உண்டு. இதனால் அவர்கள் பேசுகின்ற மொழியால் 10% கன்னடமும் தொண்ணூறு சதவீதம் சமஸ்கிருதமும் கலந்து விட்டது. அவர்கள் அதனை அறியாமல் இருக்கிறார்கள்.

கடந்த இரண்டு ஆண்டுகளுக்கு முன்பாக நான் பட்டடக்கல் என்ற பகுதிக்கு சுற்றுலா சென்று இருந்தேன். அந்தப் பகுதியினுடைய சுற்றுலா வழிகாட்டி ஒருவர் பட்டாபிஷேகம் என்ற வார்த்தையைக் கூறினார். சாளுக்கிய மன்னர்கள் பட்டாபிஷேகம் செய்துகொண்ட அந்த இடத்தை விளக்கிக் கூறும்போது பட்டாபிஷேகம் என்று கூறினார். அதற்கு நான், “பட்டாபிஷேகம் என்பது சமஸ்கிருதச் சொல், அதை நீங்கள் கன்னடத்தில் சொல்லுங்கள்” என்று கேட்டேன். அதற்கு அவர், “கன்னடத்திலும் பட்டாபிஷேகம் என்றுதான் கூறுவோம்” என்றார். எனவே, கன்னடத்திற்கும், சமஸ்கிருதத்திற்கும் வேறுபாடு தெரியாத மக்களாக அவர்கள் இருக்கிறார்கள்.

ஆனால், தமிழர்கள் தெளிவாக இருக்கிறார்கள். ஓரளவுக்கு படித்தவர்கள் எது தமிழ் சொல் எது வடசொல் என்று பிரித்து அறிந்திருக்கிறார்கள். அதற்கு காரணம் வடமொழியை நமது எழுத்து மரபிலே ஏற்றுக் கொள்ளாததுதான். எனவே, இதுதான் அவர்களுக்கு எரிச்சல் உண்டாக்கும் விதமாக இருக்கிறது. 2000 ஆண்டுகளாக தமிழ் தனித்து இயங்குகிறது. ஒரு சில சொற்கள் நம்மை அறியாமல் தமிழ்மொழியில் கலந்து விட்டாலும் கூட தொண்ணூறு சதவீதம் தனித் தமிழாகவே இயங்குகிறது. இதனைத் திராவிட மொழி குடும்பத்தைச் சார்ந்தவர்கள் ஒத்துக்கொண்டாலும் ஒத்துக் கொள்ளாவிட்டாலும் தமிழர்கள், தமிழ் மொழியை தனித்துவமாக காப்பாற்றி வருகிறார்கள் என்பதுதான் உண்மை. அதில் நமக்குப் பெருமையும் கூட.

தினகரன் ஜெய் <dinakaranjai20@gmail.com>

# கி. சரஸ்வதி கவிதைகள்



## வெளிப்படுதல்

மாபெரும் இறக்கைகளை
விரித்து மூடிக்கொள்கிறது
மேகப் பருந்து
அடை காக்கும் காலம் முடிந்ததும்
வெளிப்படுகிறது
பச்சைச் சிறகுகள் முளைத்த
மலையொன்று

## வேடம்

கோபத்தைக் காட்டும் ஒன்றைத்
தேடிப் பிடிக்க நேரமின்றி
லேசாகச் சிரித்து வைத்தேன்
நிரந்தரமாக ஒட்டிக்கொண்டு
எல்லா உணர்வுகளுக்கும்
பொதுவாகிப் போனது
அந்த முகமூடி

## வாழ்தல் பொருட்டு

காலத்தின் நெடுஞ்சுவர்களில்
செதுக்கப்பட்ட ஞாபகச் சிற்பங்களின் மேல்
பகலில் மறதிக்கான நிறத்தையும்
இரவில் நினைவிற்கான வண்ணத்தையும்
பூசி வைக்கிறது மனம்....
வாழ்தலின் பொருட்டு

## சென்று வருதல்

லேசாகத் தூறுகிறது
சடசடவெனச் சத்தமிடுகிறது
அடித்துப் பெய்து பார்க்கிறது
சுழன்றடித்தும் கலவரம் செய்கிறது
எத்தனை செய்தும் திறக்கப்படாத
ஜன்னல்களின் மேல்
தான் வந்து சென்ற
குறிப்பையெழுதி வைத்துவிட்டுத்
திரும்பித் திரும்பிப் பார்த்தபடி
மெதுவாய் நடந்து செல்கிறது
மழை

**கி. சரஸ்வதி** <ameech2004@gmail.com>

# அச்சத்தின் நிறம் சிவப்பு!

**ரதன்**

அமெரிக்காவில் 1876இல் Socialist Labor Party (SLP) என்ற கட்சி ஆரம்பிக்கப்பட்டது. Communist Party of the United States of America (CPUSA) 1919இல் ஆரம்பிக்கப்பட்டது. 1917இல் நடைபெற்ற ருசிய புரட்சியும் முதலாம் உலகப் போரும் அமெரிக்காவிற்கு கம்யூனிஸ்ட்கள் மேல் பயத்தை உண்டாக்கியது.

1918இல் பல நிகழ்வுகள் நடைபெற்றன. தபால் குண்டுகள், வேலை நிறுத்தங்கள் என்பன நடைபெற்றன. பொஸ்ரன் நகர் காவலர்கள் வேலை நிறுத்தம், சியாட்டில் துறைமுக தொழிலாளர்கள் வேலை நிறுத்தம், சுரங்கத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம், இரும்பு ஆலைத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் போன்ற வேலை நிறுத்தங்கள் குறிப்பிடத்தக்கவை. அமெரிக்கா முழுவதும் இவ்வாறான வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன.

இக்காலகட்டம் First Red Scare (1917-1920) எனக் கூறப்படுகின்றது. 1929-1939 காலகட்டத்தில் அமெரிக்காவில் ஏற்பட்ட மிகப் பாரிய பொருளாதார வீழ்ச்சியானது பல அமெரிக்கர்களை இடதுசாரிகளாக மாற்றியது.

1918 வைகாசி 16இல் Sedition Act of 1918 சட்டம் நிறைவேற்றப்பட்டது. இச் சட்டம் அமெரிக்கா அரசாங்கத்தை விமர்சிப்பவர்கள் மற்றும் தொழிற்சங்க தலைவர்கள் போன்றோரை நாடுகடத்த வழிவகுத்தது. சுமார் 200க்கும் மேற்பட்டோர் இச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டார்கள்.

அட்டர்னி ஜெனரல் ஏ. மிட்செல் பால்மர் தலைமையில் இடதுசாரிகள் கைது செய்யப்பட்டார்கள். இதனை பால்மர் Raids என்பார்கள். இக்காலகட்டத்தை Red Summer எனவும் குறிப்பிடுவார்கள். 1919இல் 249 பேர் நாடு கடத்தப்பட்டார்கள். மேலும் பலர் பல மாதங்கள் சிறை வைக்கப்பட்டார்கள். இவர்கள் வழக்கறிஞர்களை அமர்த்த அனுமதி மறுக்கப்பட்டது. இவர்களுக்கு எதிரான குற்றப் பத்திரிகையும் தாக்கல் செய்யப்படவில்லை.

தை மாதம் 1920இல் மீண்டும் சுமார் மூவாயிரம் பேர் கைதுசெய்யப்பட்டார்கள். இவர்களில் 800 பேர் பொஸ்ரன் பகுதியைச் சேர்ந்தவர்கள். டிற்றொயிட் பகுதியில் கைதானவர்கள் மீது வன்முறைகள் பிரயோகிக்கப்பட்டன.

1920இல் இடம்பெற்ற கைதுகள் பால்மருக்கு தலையிடியைக் கொடுத்தன. வழக்கறிஞர்கள், பல புத்திஜீவிகள் எதிர்ப்புத் தெரிவித்தனர். இதனால், நாடு கடத்துவதாக இருந்த 1500 பேரில் 556 பேர் மட்டுமே நாடு கடத்தப்பட்டனர்.

இதன் தொடர்ச்சியாக Second Red Scare (1947-1957) உருவானது. இது இரண்டாம் உலக மகாயுத்தத்தின் பின்னர் உருவானது. இக் காலகட்டத்தில் இடதுசாரிகள் அமெரிக்காவிற்கு எதிராக செயற்படுகின்றார்கள் என அமெரிக்க அரசு கருதியது. விளைவு அமெரிக்க பாராளுமன்ற உறுப்பினர்களை மட்டுமே உள்ளடக்கிய House Committee on Un-American Activities (HCUA) 1938இல் உருவாக்கப்பட்டது. 1945இல் இவ் விசாரணைக் குழு நிரந்தரமாக்கப்பட்டது. பின்னர் 1969இல் House Committee on Internal Security என பெயர் மாற்றம் பெற்றது.



HCUA காலத்தில் பல இடதுசாரிகள் விசாரணைக்கு அழைக்கப்பட்டார்கள். அமெரிக்க அரசு மிக மோசமான



வன்முறையை இடதுசாரிகள் மீது பிரயோகித்தது. இந்த விசாரணைக் குழு கலை, இலக்கியவாதிகளையும் விசாரணைக்கு அழைத்தது. ஒருவர் சற்று முற்போக்காக உரையாடினால் அல்லது எழுதினால் அவர் மீது அமெரிக்கா அச்சம் கொண்டது. முற்போக்கு சிந்தனை என்பதனையே பயங்கரவாதம் எனக் கருதியது.

முதலாவது சிவப்பு அச்சத்தின் போது பால்மர் தலைமையேற்றார். இரண்டாவதின் போது செனட்டர் ஜோசப் மெக்கார்த்தி தலைமையேற்றார். அதனால் இது McCarthyism எனவும் அழைக்கப்பட்டது. கம்யூனிச சித்தாந்தத்தை அமெரிக்கர்களின் அன்றாட வாழ்க்கையிலிருந்து வெளியேற்றுவதே அவர்களின் முக்கிய குறிக்கோளாக இருந்தது. இக்காலகட்டத்தில் சீனாவில் மாவோ சே துங்கின் சீனப் புரட்சியும் நடைபெற்றது. இவ் வெற்றி அமெரிக்காவை கலக்கமுறச் செய்தது.

*1953 ஆனி 19*இல் யூலியஸ் ரோசன்பெர்க், எத்தேல் ரோசன்பெர்க் தம்பதிகள் அமெரிக்காவிற்கு எதிராக சதி செய்ததாக கூறி தூக்கிலிடப்பட்டனர். யூலியஸ் ஒரு பொறியியலாளர். அமெரிக்க ராணுவத்தில் வேலை பார்த்து வந்தார். இவரும் இவரது மனைவி எத்தேலும் அமெரிக்க கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள். யூலியஸ் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் என்று குற்றஞ்சாட்டப்பட்டு அமெரிக்க ராணுவத்திலிருந்து வெளியேற்றப்பட்டார். எத்தலின் தம்பி டேவிட் கிறீன்கிளாஸ் ராணுவத்தில் சார்ஜன்ட்டாக இருந்தார். அணு ஆயுத தயாரிப்புத் திட்டத்தில் ஒரு ராணுவ தொழிற்நுட்பவியலாளராக கடமைபுரிந்தார். இவர் அணு ஆயுத ரகசியங்களை யூலியஸ்க்கு வழங்கியதாக குற்றஞ்சாட்டப்பட்டது. யூலியசும் எதிலும் அணு ஆயுத இரகசியங்களை சோவியத் யூனியனுக்கு வழங்கியதாக குற்றஞ்சாட்டப்பட்டு கைதாகினர். யூலியஸ், மெக்சிக்கோவில் கைது செய்யப்பட்டு நாடு கடத்தப்பட்டார்.

*2008*இல் ஒபமா இவர்களை தூக்கிலிட்டது தவறு எனக் கூறியிருந்தார். இன்றும் அரசியல் அறிஞர்கள் எத்தேல், யூலியஸ் மனைவி என்பதற்காக தூக்கிலிடப்பட்டது தவறானது எனக் கூறுகின்றார்கள்.

*1947*க்கும் *1956*க்குமிடைப்பட்ட காலகட்டத்தில் அமெரிக்க அரசு ஊழியர்கள் அமெரிக்க அரசுக்கு

உண்மையாகவுள்ளர்களா என விசாரிக்கப்பட்டனர். 12,000 பேர் தங்களது பதவிகளை ராஜினாமாச் செய்தனர். 2,700பேர் வேலை நீக்கம் செய்யப்பட்டனர்.

இரண்டாவது சிவப்பு அச்சத்தின் போது மெக்கார்த்தி இடதுசாரி என கருதப்பட்டவர்கள் மீது மிகக் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டார். இவர் இளம் வயதில் நீதிபதியாகவும் கடமையாற்றியுள்ளார். அதற்கு முன்பாக பலசரக்கு கடை முகாமையாளராகவும் வேலை செய்துள்ளார். தனது உயர் பாடசாலை பாடங்களை ஒரே வருடத்தில் முடித்தார். முதலில் இரண்டு வருடங்கள் பல்கலைக் கழகத்தில் பொறியியளாளராக கல்வி கற்றார். பின்னர் சட்டம் படித்தார். இரண்டாம் உலகப் போரின் போது கடற்படையில் கடமையாற்றியிருந்தார். முதலில் டேமோகிரட்டிக் கட்சியின் சார்பாக போட்டியிட முயன்றார். டேமோகிரட்டிக் கட்சி சார்பாக வேட்பாளராக முடியவில்லை. பின்னர் றிப்பப்பிளிக்கன் கட்சி சார்பாக போட்டியிட்டு வெற்றி பெற்றார்.

1950ஆம் ஆண்டு லிங்கனின் பிறந்த நாள் நினைவு மதிய உணவு உண்ணலின் போது,“அமெரிக்க அரசில் வேலை செய்யும் 205 பேர் இடதுசாரிகள்” என குற்றஞ்சாட்டி அவர்களது பெயரையும் அறிவித்தார். இதன் பின்னர் இவரது பெயர் அமெரிக்க மக்களிடம் மிகவும் பிரசித்தி பெற்றது. இது அவருக்கு அரச அலுவல்களுக்கான செனட் குழுவின் தலைவர் பதவியை பெற உதவியது. இடதுசாரிகள் மீது விசாரணை செய்ய இப் பதவி உதவி புரிந்தது.

மெக்கார்த்தி, ஒரு பாலியியலாளர்களையும் ஐயத்துடனேயே பார்த்தார். அவர்கள் கம்யூனிச ஆதரவாளர்கள் என கருதினார். இதனால், பல ஒரு பாலியியலாள அரசு ஊழியர்கள் வேலை இழந்தனர். பலர் மிரட்டியும் சிறையில் அடைக்கப்போவதாகவும் கூறி செனட் முன் விசாரிக்க அழைக்கப்பட்டனர்.

இவரதுநண்பர்எட்கர்கூவர்எப்.பி.ஐயின்தலைமை நிர்வாகியாக கடமையாற்றிக் கொண்டிருந்தார். இதனால் பலரைப் பற்றிய தகவல்களை பெறக் கூடியதாகவிருந்தது. அடுத்த இரண்டு வருடங்கள் இந்த சூனியக்கார வேட்டை தொடங்கியது. இவரை எதிர்த்து அரசியல்வாதிகள் செயற்பட மறுத்தனர். ‘த போஸ்ரன் போஸ்ட்’ பத்திரிகை இவரை எதிர்ப்பது ஒரு வகை தற்கொலைக்கு நிகரானது எனத் தெரிவித்திருந்தது. டேமோகிரட்டிக் கட்சியினர் மட்டுமல்லாது இவரது கட்சியான றிப்பப்பிளிக்கன் கட்சியினரும் கூட இவரைக் கண்டு பயந்தனர். அப்போதைய அமெரிக்க அதிபர் ரூமனின் அரசினுள்ளும் வெளியிலும் சோவியத் உளவாளிகள் உள்ளனர். பலர் சோவியத் ஆதரவாளராக உள்ளனர் என குற்றஞ்சாட்டினார்.

ஐப்பசி 1953இல் மெக்கார்த்தி, அமெரிக்க ராணுவத்தில் உள்ள இடதுசாரிகள் வெளியேற்றப்படவேண்டும் எனக் கூறி அப்போதைய அமெரிக்க ராணுவ தளபதி றொபேட் ஸ்ரீவன்ஸ்க்கு களங்கம் ஏற்படுத்த முயற்சித்தார். இதுவே இவருக்கு வீழ்ச்சியாகவும் அமைந்தது. 1954ஆம் ஆண்டு ராணுவம்-மெக்கார்த்தி விசாரணைகள் இவருக்கு பாதகமாக அமைந்தது. செனட் இவருக்கு எதிராக வாக்களித்து இவரது நடவடிக்கைகளை கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தது. இதன் பின்னரும் இவர் செனட்டில் அங்கம் வகித்தார். இவரது பேச்சை எவரும் கேட்கவில்லை. ஆனாலும் தொடர்ந்து கம்யூனிசத்துக்கு எதிராக தனது கருத்துக்களை கூறிவந்தார்.

மெக்கார்த்தி மேல்தட்டு வர்க்கத்தினருக்கான ஒரு கிளர்ச்சியாளர். இவருக்கு கம்யூனீசத்தின் மீது வெறுப்பு இல்லை. அதே சமயம் மதத்தின் மீது அதீத நம்பிக்கையும் இல்லை. நாட்டுப் பற்றும் இல்லை. இவற்றின் மீதான வெறுப்பும் பற்றும் நம்பிக்கையும் தனது சுயநல நோக்கத்துக்கானது. தனது செல்வாக்கு அதிகரிக்க இது உதவும் என நம்பினார். இதன் விளைவுகளைப் பற்றி இவர் பயப்பிடவில்லை. ஆனால், அனைத்தையும் ஒரு அபசாரமானதாகவே நோக்கினார். தன்னை ஒரு நிறைவேற்று மக்கள் கிளர்ச்சித் தலைவராக காட்டிக்கொண்டார். இவருக்கு சாட்சியங்களை ஓரங்கட்டத் தெரிந்திருந்தது. பாதிக்கப்பட்டோரை அவமானப்படுத்தத் தெரிந்திருந்தது. மக்களை பயப்படுத்தத் தெரிந்திருந்தது. இறுதியில் இவற்றின் மூலம் பாதிக்கப்பட்டவர்களை தலைப்புச் செய்திகளாக மாற்றினார். இவரைப் பற்றி பின்னாட்களில் ஆய்வு செய்த போல் ஜோன்சன், ‘மெக்கார்த்தி ஒரு நல்லுணர்வு கொண்ட, சீரிய அரசியல்வாதி இல்லை. ஒரு சாகசக்காரன். அரசியலை விளையாட்டாக கருதினார்’ என தனது ஆய்வில் தெரிவித்துள்ளார்.

அமெரிக்கா தொடர்ச்சியாக தனது கட்டுப்பாட்டுக்குள் உலக நாடுகளை வைத்திருந்தது. மத்திய மற்றும் லத்தீன் அமெரிக்க நாடுகளில் இடதுசாரிகள் அரசமைப்பதை எவ்வாறியினும் தடுத்து வந்தது. கஸ்ரோவை கொல்வதற்கு பல தடவைகள் முயற்சி செய்தனர். அவ்வாறே சிலியிலும் அமெரிக்கா தனது கைவரிசையைக் காட்டியது.

Operation Condor- Eliminating Marxist Subversion ஆர்ஜன்ரீனா, சிலே, உருகுவே. பரகுவே, பொலிவியா, பிரேசில், பெரு, ஈகுவடேர் போன்ற லத்தீன் அமெரிக்க நாடுகளுடன், மத்திய அமெரிக்க நாடுகளிலும் அமெரிக்க அரசினால் செயல்படுத்தப்பட்டது. இடதுசாரி புத்திஜீவிகள், ஆதரவாளர்கள் ஒழிப்பே இதன் பிரதான நோக்கம். இடதுசாரி சார்பு அரசுகளை



தூக்கியெறிந்து, அமெரிக்க சார்பு அரசுகளை ஆட்சியில் இருத்துவதன் மூலம், தொடர்ச்சியான சுரண்டல்களையும் அமெரிக்க செயல்படுத்திவந்தது. ஜோர்ன்சன், நிக்சன், போர்ட், கார்ட்டர், றீகன் ஆகிய ஜனாதிபதிகளின் ஆட்சிக் காலங்களில், அவர்களது ஆசியுடன் இந்த நடவடிக்கை இடம் பெற்றது.

1954இல் பரகுவேயில், 1964இல் பிரேசிலில், 1971இல் பொலிவியாவில், 1973இல் உருகுவே மற்றும் சிலேயில், 1975இல் பெருவில், 1976இல் ஆர்ஜன்ரீனாவில் அரசுகள் தூக்கியெறியப்பட்டு, அமெரிக்க சார்பு ஆட்சிகள் அமைக்கப்பட்டன.

1962இல் கியுபாவில் சோவியத் யூனியன் ஏவுகணை தளத்தை அமைக்க முற்பட்டபோது, அப்போதைய அமெரிக்க அதிபர் கென்னடி ருசிய கப்பல்களை திரும்பிப்போகுமாறு கூறினார். பதிலுக்கு சோவியத் யூனியன் துருக்கியில் உள்ள அமெரிக்க ஏவுகணைகளை அகற்றுமாறு கேட்டது. கென்னடி ஒப்புக்கொண்டு ஏவுகணைகளை அகற்றினார்.

ஏவுகனைகள் அகற்றப்பட்டதன் பின்னர் கென்னடிக்கும் குருசேவ்விற்கும் நெருக்கமான உறவு ஏற்பட்டது. கென்னடி கொல்லப்பட்டமைக்கான காரணங்களில் ஒன்றாக இதனையும் அரசியல் ஆய்வாளர்கள் குறிப்பிடுவார்கள்.

சோவியத் யூனியனின் வீழ்ச்சியின் பின்னர் மீண்டும் ருசியாவை உலகின் வல்லரசாக மாற்ற முயற்சிப்பவரும் அமெரிக்காவிற்கு எதிராக துணிந்து எதிர்க்குரல் எழுப்புவருமான புட்டினுக்கு, ரம்பின் ஆட்சிக் காலத்தில் அமெரிக்காவில் செல்வாக்கு அதிகரித்திருந்தது. இதனை வீழ்த்துவதற்காக ‘நியுயோர்க் டைம்ஸ்’, ‘டைம்’ போன்ற அச்சு ஊடகங்கள் பல பக்கங்களை செலவழித்தன. அண்மையில் நடைபெற்ற வட-அமெரிக்க நாடுகளின் மாநாட்டிலும் பைடன் கம்யூனிசத்தை அமெரிக்கா வளரவிடாது எனத் தெரிவித்திருந்தார்.

முதல் இரண்டு சிவப்பு அச்சங்கள் அமெரிக்கா கம்யீனிசத்தை கண்டு மிரள்கின்றது என்பதனை வெளிப்படுத்துகின்றது. அதன் பின்னர் இன்று வரை சிவப்பின் மீதான அச்சங்கள் தொடர்கின்றன. ஜோன்.எப்.கென்னடி படு கொலை உட்பட்ட பல நிகழ்வுகளின் பின்னால் இந்த சிவப்பு அச்சமே காரணம்.

அமெரிக்க மக்கள் மத்தியில் ‘சிவப்பு’ அச்சத்தை ஏற்படுத்தியதன் மூலம், அமெரிக்கா தனது சந்தையை உலகெங்கும் விரிவாக்கியுள்ளது. இன்றைய உக்ரேன் - ருசியா போர் வரை அமெரிக்காவினால் உருவாக்கப்பட்ட போர்கள் அமெரிக்காவின் பெரும் நிறுவனங்களுக்கு பெரும் லாபத்தை பெற்றுக் கொடுத்துள்ளன.

இன்று பைடனின் அரசும் கம்யூனிசியம் அமெரிக்காவில் மீண்டும் துளிர்விடக் கூடாது என்பதில் மிகவும் அவதானமாகவுள்ளது. உக்ரேன் - ருசியா போரை உருவாக்கி ருசிய எதிர்ப்பினூடாக இடதுசாரிச் சிந்தனையை உலகரங்கிலிருந்து நீக்க முற்படுகின்றது.

“ரதன்” <rathan100@gmail.com>

# கண்ணாடியுள்ளிருந்து

ஸிந்துஜா
ஓவியம்: அசோக் முல்லிக்

நாகசாமி ஒரு காரணமும் இல்லாமல் திரும்பிப் பார்த்தான். அப்படித் திரும்பிப் பார்த்தது அடுத்த சில காலத்துக்குத் தன்னைத் தின்று கொல்லப் போகிறது என்று அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை.

அவன் அலுவலகம் விட்டுக் கிளம்பும் போது மணி ஐந்து ஆகியிருந்தது. வாரத்தில் ஐந்து வேலை நாள்கள் என்ற விதியுடன் இயங்கும் அவன் அலுவலகத்தில் வேலை நேரம் காலை ஒன்பது முதல் மாலை ஆறு மணி வரை என்றிருந்தது. ஆனால், அன்று அவன் ஒரு மணி நேரம் முன்னதாக அலுவலகத்தை விட்டு வெளியேற அனுமதி பெற்றுக் கிளம்பியிருந்தான். ஆறு மணிக்கு அவன் வந்து விடுவதாகக் காலையிலும் மத்தியானமும் உறுதிப்படுத்திக் கல்யாணியிடம் சொல்லியிருந்தான். அவளை இன்று வெளியே அழைத்துக் கொண்டு போய்ப் புடவை வாங்கித் தருவதாக ஏற்பாடு. ஷாப்பிங் முடிந்ததும் டின்னருக்கு வெளியிலேயே சாப்பிடும் திட்டமும் இருந்தது.. நேற்று இதே மாதிரி வாக்குக் கொடுத்து விட்டுக் காப்பாற்ற முடியாமல் போனதால் சந்தித்த திண்டாட்டத்தை நினைத்தே இன்று சீக்கிரம் வந்து விடுவதாக வாக்குறுதி கொடுத்து விட்டு ஆபீஸிலும் பெர்மிஷன் வாங்கி விட்டான்.

அவன் அலுவலகத்தை வீட்டுக் கிளம்பும் போது அவனது மானேஜர் அவனிடம் ஒரு கவரைக் கொடுத்து, "திடீர்னு நாள்னிக்கி போர்டு மீட்டிங்ன்னு நிச்சயம் ஆயிருக்கு. வழிலே காந்தி நகர்ல நம்ம டைரக்டர் பசுவய்யா வீட்டுல இந்த மீட்டிங் நோட்டீஸைக் கொடுத்திட்டுப் போயிடேன்" என்றார்.

"இல்லே சார், இப்ப நான் வேறெங்கேயோ போறேன்" என்றான் தயங்கியபடி.

"நீ டிம்பக்ட்டூவுக்கு வேணும்னாலும் போயிக்கோ. ஆஃபீஸ் காரியமாதான அனுப்பறேன். ஆட்டோலையே காந்திநகருக்குப் போயிட்டு அங்கேர்ந்து எங்கே போகணுமா அங்கே போயிடு. நீ அதை ஃபுல்லா ஆபீஸ்ல க்ளெய்ம் பண்ணிக்கோ" என்று சொல்லி விட்டு மேஜை மேலிருந்த ஃபைலைப் பார்க்க ஆரம்பித்து விட்டார்.



நாகசாமி எரிச்சலுடன் அங்கிருந்து நகர்ந்தான். ஆனால், கையிலிருந்து செலவழிக்க இருந்த ஆட்டோ சார்ஜ் ஆஃபீஸ் செலவில் என்று ஆனதில்

மனப்புண் மெதுவாக ஆற ஆரம்பித்தது. அவன் பசுவய்யாவின் வீட்டில் இறங்கி கவரைக் கொடுத்து விட்டு வெளியே வர அரை மணி ஆகிவிட்டது. ஆபீஸ் ஊழியனைக் காக்க வைக்கா விட்டால் அப்புறம் டைரக்டருக்கு என்ன மரியாதை? அவன் கரித்துக் கொண்டே வெளியே வந்தான். அந்தச் சாலையில் வந்த ஆட்டோக்கள் அவனது அழைப்பை மறுத்தபடி சென்றன.

சிண்டிகேட் பேங்க் கட்டிடம் அருகே ஆட்டோக்கள் காத்து நிற்கும் என்று அங்கே சென்றான். என்ன ஒரு கூட்டம் சாலைகளில் வழிந்து கொண்டிருந்தது! அங்கிருந்து ஒரு பக்கம் ரயில்வே ஸ்டேஷனும் பஸ் ஸ்டேஷனும் அருகருகே இருந்தன. மற்றொரு பக்கம் ஷாப்பிங், சினிமா, ஓட்டல் என்று மக்கள் கூட்டத்தை இழுக்கும் மெஜஸ்டிக் ஏரியா. அப்புறம் ஏன் இப்படி ஒரு காலாட்படைக் கூட்டம் இருக்காது?

ஆனால், அவனுக்கு வேண்டிய ஆட்டோ மாத்திரம் கிடைத்தபாடில்லை. இன்று அவன் போக வேண்டியது யாரும் செல்லக் கூடாத பகுதியாக ஆகிவிட்டது என்பது போலக் கிடைத்த ஆட்டோக்காரர்களும் வர மறுத்தனர். அப்போதுதான் திரும்பிப் பார்த்த அவன் கண்ணில் அந்தக் காட்சி பட்டது.

சற்றுத்தொலைவில் அவனது பெரியப்பா ராஜாராம் ஒரு பெண்ணுடன் நடந்து போய்க் கொண்டிருந்தார். யார் அது? அவன் சற்று உற்றுப் பார்த்தான். இதற்கு முன் அவளைப் பார்த்ததில்லை என்று அவனுக்குத் தோன்றியது. அந்தச் சமயம் ராஜாராமின் இடது கையை அவளது வலது கை பற்றிக் கோர்த்துக் கொண்டது. அவன் அதிர்ச்சி அடைந்து ஒரு நிமிஷம் பிரமை பிடித்தவன் போல நின்றான்.



சுதாரித்து மறுபடியும் பார்த்த போது அவர்கள் இருவரும் இன்னும் கை கோர்த்துக் கொண்டு மெஜஸ்டிக்சர்க்கிள் செல்லும் மெயின் ரோடில் நடந்து போனார்கள். அவன் உடம்பில் ரத்தம் எகிறுவது அவனுக்கே தெரிந்தது. யார் அந்தப் பெண்மணி? பெரியப்பா இவ்வளவு சுவாதீனத்துடன் அவள் ஸ்பரிசத்தை ஏற்றுக்கொண்டு நடப்பது என்றால்?

அவன் ஆட்டோ பிடிப்பதை நிறுத்தி விட்டு வேகமாக அவ்விருவரையும் தொடர்ந்தான். கல்யாணியின் நினைவு திடீரென்று அவனுக்கு ஏற்பட்டது. நேற்றே அவன் வாக்குத் தவறிவிட்டான் என்று கடுங் கோபத்தில் இருந்தாள். அவளைச் சமாதானப்படுத்துவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது. ஆனால், இப்போது இந்த விஷயத்தைக் கவனிக்காமல் எப்படிப் போவது? அரைமணிக்குள் கண்டுபிடித்து விட முடியாதா? ஆறு மணிக்குப் பதிலாக ஆறேகாலுக்குப் போய் விடலாம். இந்தச் சின்ன தாமதத்தை எல்லாம் அவள் பொருட்படுத்த மாட்டாள்.

மனது நினைவில் நீந்திக் கொண்டிருக்கக் கால்கள் அவனுக்கு முன்னே போகும் ஜோடியின் பின்னால்தான் இருந்தன. அவன் பெரியப்பா எங்காவது சட்டென்று திரும்பிப் பார்த்தால் கண்ணில் படாமல் பக்கத்தில் எங்காவது ஒதுங்கிக்கொள்ள வசதியாக நல்ல இடைவெளி விட்டு அவன் நடந்தான்.

அவன் கண்கள் கண்டதை அவன் மனம் நம்ப மறுத்துக் குறுக்குக் கேள்விகளாகப் போட்டுக் கொண்டிருந்தது. யார் அந்த லேடி? எங்கே போகிறார்கள்? எவ்வளவு நாளாக இது நடக்கிறது? அவர்கள் இருவரும் சாலையைக் கடக்க சிக்னலில் நின்ற போது அந்தப் பெண்மணி இருபுறமும் வரும்

வண்டிகளை பார்த்ததை அவன் பார்த்தான். அவளைப் பார்த்தால் நாற்பது - நாற்பத்தி ஐந்து வயதுக்காரியைப் போல இருக்கிறாள். ராஜாராமுக்கும் இப்போது அறுபத்தி மூன்று வயது ஆகிறது. இவள் உறவுக்காரப் பெண்மணியா? இதுவரை அவன் அவளை அவர்கள் வீட்டிலோ ஏதாவது விசேஷங்களிலோ பார்த்ததில்லை. அப்படி ஒட்டிக் கொள்ளும் உறவு என்றால் அவள் ஏன் வீட்டுக்கு வரவில்லை? அல்லது இப்போது அவளை வீட்டுக்குத்தான் அழைத்துச் செல்கிறாரா?

அவன் கேள்விக்குப் பதில் தருவது போல அவர்கள் சாலையைக் கடந்து சற்று நடந்ததும் நின்றார்கள். அவர், அவளிடம் ஏதோ சொல்லிவிட்டுக் கூட்டமாயிருந்த ஒரு கடையின் படிகளில் ஏறினார். ஆர்ய பவன்! அவருக்கு மிகவும் பிடித்த சோன்பப்டி வாங்கப் போகிறார். அவன் எப்போது மெஜெஸ்டிக் போகிறேன் என்று சொன்னாலும் அவருக்கு இந்த ஆர்யபவன் சுவீட் அவன் வாங்கிக்கொண்டு வந்து கொடுக்க வேண்டும். இதை வாங்கிக் கொண்டு அவர் அவளை வீட்டுக்கு அழைத்துச் செல்லப் போகிறாரா?

நாகசாமி சிறு வயதிலேயே பெற்றோரை இழந்து விட குழந்தைப் பேறு இல்லாத பெரியப்பாவின் வீட்டில் வளர்ந்தான். இரண்டு வருஷங்களுக்கு முன்புதான் பெரியம்மா மாரடைப்பில் காலமானாள். அதற்கு ஒரு வருடம் கழித்து அவனுக்குத் திருமணம் ஆயிற்று. அவனும் மனைவியும் பெரியப்பாவுடன்தான் வசித்தார்கள். மல்லேஸ்வரத்தில் பெரிய வீடு. இப்போது அவர்கள் அங்குதான் போகிறார்களா?

அவன் சற்று நிதானத்தை இழந்து விட்ட பொறுமையுடன் நின்றான். இப்போது அந்தப் பெண்மணியைப் பார்த்தான். நல்ல உயரமும் அதற்கேற்ற உடல் கட்டும் கொண்டு அவள் நின்றிருந்தாள். சற்றுக் கூர்மையான நாசியும், சற்று உருண்டை வாகான முகமும் அவளை அழகாகக் காட்டின. அவன் கோபுலுவின் ஓவியங்களில் இம்மாதிரிப் பெண்ணைப் பார்த்திருக்கிறான். வெள்ளையும் கறுப்பும் பச்சையும் கலந்த புடவையும் கறுப்பு ரவிக்கையும் அணிந்திருந்தாள். அது அவளை ரசனையுள்ளவளாகக் காண்பித்ததாக இவன் நினைத்தான். ஆனால், யார் இவள்? ஒரு சமயம் பார்த்தால் ஏதோ காலேஜ் புரஃபஸர் மாதிரி இருக்கிறாள். ஒரு விதத்தில் அவன் ஆபீசில் டைரக்டராக இருக்கும் திலகவதி கங்காதரப்பாவின் அலட்சியம் அவள் நிற்பதில் தெரிகிறது...

அவன் யோசிப்பதைத் தடுப்பதுபோல ராஜாராம் கடையிலிருந்து வெளியே வந்தார். கையில் வைத்திருந்த ஆர்யபவன் பையைக் காட்டி அவர் ஏதோ சொல்ல அவள் சிரிப்பதை இவன் பார்த்தான். அவர்கள் வந்த வழியே திரும்பி ஆட்டோ ஸ்டான்ட் பக்கம் போவார்கள் என்று அவன் தன்னை இன்னும் சற்று ஒடுக்கிக் கொண்டு நின்றான். ஆனால், அவர்கள் அவன் நினைத்த திசைக்கு நேர் எதிரே சென்ற பாதையில் நடந்தார்கள். ராஜாராம் இப்போது அவள் தோள் மீது கை போட்டுக் கொண்டு நடந்து சென்றார்.

அவர்களைப் பின்பற்றிச் செல்வதா அல்லது கல்யாணிக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதா என்று அவனுக்குள் குழப்பம் ஏற்பட்டது. கைக் கடிகாரம் ஐந்தே முக்கால் என்றது. இப்போது ஒரு ஆட்டோ பிடித்தால்தான் கல்யாணியை ஆறேகாலுக்குப் போய்ப் பார்க்க முடியும். ஆனால், அவன் மனது ராஜாராமைப் பின்பற்றச் சொல்லித் துடித்துக் கொண்டிருந்தது. அவன் கல்யாணிக்குப் போன் செய்யலாமா என்று நினைத்து கால் சட்டைப் பையிலிருந்து போனை எடுத்தான். ஆனால், அவள் அப்போது யாருடனாவது பேசிக் கொண்டிருந்தால்? அல்லது போனை எடுக்காமல் இருந்தால்? சற்று நேரம் கழித்து அவனைக் கூப்பிட்டால்? அப்போது அவனால் எடுக்க முடியாமல் போய்விட்டால்? அவன் போனைக் கால் சட்டைப் பைக்குள் போட்டு விட்டு அவர்களைப் பின் தொடர்ந்தான்.

அவர்கள் சற்று தூரம் சென்றதும் மெயின் சாலையிலிருந்து இடப்பக்கம் அபிநயா தியேட்டருக்குச் செல்லும் வழியில் சென்றார்கள். அவன் இந்தப் பக்கம் வந்து நிறைய நாளாகி விட்டது. இந்தத் தெரு உண்டான காலத்தில் திருட்டுச் சாமான்களைக் கொள்ளை விலை மலிவில் விற்கும் இடம் என்று பெயர் பெற்றது! அவர்கள் தியேட்டரைக் கடந்து சென்றார்கள். சாலையின் பாதியை மனிதர்களும் மீதியை சாவகாசமாக நடந்த மாடுகளும் புகை கக்கிக் கொண்டு செல்லும் வாகனங்களும் ஆக்கிரமித்திருந்தன. இடது பக்கமும் வலது பக்கமும் நெரிசலான சின்னச் சின்னக் கடைகள் ஒரு மாதிரியான இருட்டில் விளக்குகள், மின்சார சாதனங்கள் ஆகியவற்றை விற்பதாக அறிவித்து நின்றன. வந்து விட்ட இருட்டின் துணையுடன் பிளாட்ஃபார்ம் வியாபாரிகள் தத்தம் கூடைகளையும் பெட்டிகளையும் இறக்கி சாமான்களை வெளியே எடுத்தார்கள். கலர் கலரான ஜாக்கெட்டுகள், பிளாங்கெட்டுகள், அரைக் கை முழுக்கை கைச் சட்டைகள், பேண்ட்கள், புடவைகள் என்று - ஒரு சலவைக்குக் கூட நிற்காதவற்றை - மலையெனக் குவித்துக் கொண்டிருந்தார்கள். திருட்டுக் கலையிலிருந்து ஏமாற்றும் கலைக்கு முன்னேறி விட்டார்கள் என்று நினைத்தபடி நாகசாமி நடப்பதற்குச் சிரமம் தரும் சாலையில் நடந்து சென்றவர்களோடு இடித்துத் தள்ளிக் கொண்டு சென்றான்.

அவனுக்குத் தன் மேலேயே வெறுப்பு ஏற்பட்டது. சற்று அவமானமாக உணர்ந்ததினால் எழும்



வெறுப்பு என்று நினைத்தான். ‘இதென்ன காரியம் செய்து கொண்டிருக்கிறோம்? எதற்காக இந்தப் பின் தொடருதல் நடக்கிறது?’ என்று ஆயாசமாக இருந்தது. ஆனால், மனதின் இன்னொரு குரல் ‘என்னன்னு பாத்துரணும்‘ என்று ஆயாசக் குரலை விரட்டியது. பெரியப்பாவின் மீது கோபம் கூட வந்தது. வயதுக்கான விவஸ்தை இல்லாமல் எதற்கு இந்த மனிதன் இப்படி ஒருத்தியோடு ஒட்டிக் கொண்டு போக வேண்டும்? அவரை ஒரு பலஹீனமான மனிதனாகக் காண்பிக்கும் செயலை உணர முடியாமல் இருக்கிறாரா அல்லது ஆசை அவரைக் கண் தெரியாத மனிதனாக ஆக்கிவிட்டதா. ஆசை! அவன் திடுக்கிட்டான். இம்மாதிரி அவரைப் பற்றி ஆபாசமாகத் தான் நினைப்போம் என்று அவன் கனவிலும் நினைத்ததில்லை.

அவர்கள் சற்றுப் பெரிதாகக் காணப்பட்ட ஒரு வீட்டின் முன்னே நின்றார்கள். அந்தப் பெண்மணி கைப் பையைத் திறந்து சாவியை எடுப்பதை நாகசாமி பார்த்தான். அவள் வாசல் கதவருகே சென்று சாவியைப் போட்டுக் கதவைத் திறந்தாள். இருவரும் உள்ளே செல்லக் கதவு மூடப்பட்டது. விளக்குகள் போடப்பட்டதை அவன் பார்த்தான். இரவின் பின்னணியில் விளக்கு வெளிச்சத்தில் வீடு அழகாகக் காட்சியளித்தது. இப்போது தான் என்ன செய்ய வேண்டும்? அவனுக்குக் குழப்பமாக இருந்தது.

அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். எதிர்ச்சாரியில் ஒரு பானி பூரி விற்கும் கடை தென்பட்டது. கடை வாசலில் சிறிய மேஜை நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. அவனுக்குப் பசிக்கிறாற் போலிருந்தது. அங்கு உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டே இந்த வீட்டையும் கவனிக்க முடியும். அவன் கடைக்குச் சென்று பாவ் பாஜிக்கு ஆர்டர் கொடுத்தான். அவன் வீட்டைப் பார்த்த போது அது ஒன்றுமறியாக் குழந்தை போல நின்றிருந்தது. இப்போது பெரியப்பா என்ன செய்து கொண்டிருப்பார்? அவன் அந்த வழியில் நினைக்கச் சென்ற மனதைக் கட்டுப்படுத்திக் கொண்டான். அவர்கள் எப்போது வெளியே வருவார்கள்? அல்லது பெரியப்பா மட்டும் வெளியே வந்து வீட்டுக்குப் போவாரா?

அப்போது “டேய் நாகு!” என்ற குரல் கேட்டு நாகசாமி திரும்பிப் பார்த்தான். அவன் பால்ய சிநேகிதன் சரவணன். இந்தக் கடங்காரன் இப்போது எங்கே வந்து தொலைத்தான்? அவன் பார்வையில் பெரியப்பாவும் அந்தப் பெண்மணியும் பட்டுத் தொலைத்தால்? இவனைச் சீக்கிரம் கழற்றி விட

வேண்டும்.

நாகு அவனைப் பார்த்துப் புன்னகை செய்தான். தன் அருகில் வந்து உட்காருமாறு கூப்பிட்டான்.

“இல்லே, நான் வீட்டுக்குப் போயிட்ருக்கேன். எதேச்சையா உன் முகத்தைப் பார்த்தேன். நீ எங்கடா இந்தப் பக்கம் வந்து சாப்பிட உக்காந்திருக்கே? வீட்லே யாரும் இல்லியா?” என்றான்.

“இங்கே எங்க கம்பனி வக்கீல் ஆபீஸ்லே கொஞ்சம் வேலையா வந்தேன். உனக்குத்தான் தெரியுமே, வக்கீலைப் பாக்கணும்னா ராத்திரிதான் அவர் ஃப்ரீயா இருப்பார்னு.”

“உன்னோட பெரியப்பாவே பெரிய வக்கீலாச்சே? எத்தனை ஏழைங்களுக்கு உதவி செஞ்சிருக்காரு? ரொம்ப நல்ல மனுஷன். ட்...டேயப்பா, என்னா அனுபவம்! என்னா புத்தி! உங்க கம்பனிக்கே அவரை இளுத்து விட்டிருக்கலாமே” என்றான் சரவணன்.

“எங்க கம்பனிலே கோட்டு சூட்டு பூட் போட்ட வக்கீல்தான் வர முடியும்“ என்று சிரித்தான் நாகசாமி.

“சரி, நான் கிளம்பறேன். மெஜெஸ்டிக் பஸ்டாண்டுக்குப் போயி ஹெண்ணூர் போகணும். ஒம்பதரை மணிக்குள்ளார வாச்சும் வீட்டுக்கு போயிடலேன்னா திட்டு விளும்“ என்று சிரித்தான் சரவணன்.

“அது எல்லா வீட்டிலேயும் நடக்கறதுதானே” என்று நாகசாமியும் சிரித்தான். சரவணன் அவனிடம் விடை பெற்றுச் சென்றான்.

பாவ் பாஜி சாப்பிட்டு முடித்தாலும் அங்கே இன்னும் சற்று நேரம் உட்கார வேண்டுமே என்று அவன் ஒரு மசாலா பாலுக்கு ஆர்டர் கொடுத்தான். எதிர்ச் சாரி வீட்டிலிருந்து நடமாட்டம் ஒன்றும் தெரியவில்லை. இருவரும் உட்கார்ந்து டிவி பார்த்துக் கொண்டிருப்பார்கள். அல்லது பேசிக் கொண்டிருப்பார்கள். அல்லது சாப்பிட்டுக் கொண்டிருப்பார்கள்.

நாகசாமி இன்னும் ஒரு கால்மணி நேரத்தை அங்கேயே கழித்துவிட்டு எழுந்தான். அவனுக்குக் கோபமும் எரிச்சலும் ஏற்பட்டன. எப்படிப் போயிருக்க வேண்டிய இனிமையான பொழுது எப்படி ஒரு குடைச்சலைக் கொடுக்கும் மாலையாகி விட்டு, இரவுக்கும் தொடர்கிறது!

அப்போது எதிர் வீட்டு விளக்குகள் அணைந்தன. அவன் திடுக்கிட்டு வாசலைப் பார்த்தான். இப்போது ஒருவரோ அல்லது இருவருமோ வருவார்கள் என்று நினைத்தான். ஐந்து நிமிஷமாயிற்று, பத்து நிமிஷமாகி பதினைந்தும் ஆகிவிட்டது. யாரும் வரும் வழியாகத் தெரியவில்லை. அவனுக்கு இருந்த மன உளைச்சலில் நேரே அங்கே போய்க் கதவைத் தட்டினால் என்ன என்று ஒரு வெறி ஏற்பட்டது.

அப்போது அவனது கைபேசி ஒலித்தது. எடுத்துப் பார்த்தான்.கல்யாணி. அவன் பதில் அளிக்க விரும்பாமல் கையில் வைத்துக் கொண்டு நின்றான். சில வினாடிகளுக்குப் பின் ஒலி நின்றது. அவன் கைப்பேசியைப் பார்த்தபடி நின்றான். சில வினாடிகளுக்குப் பின் கல்யாணிக்குப் போன் செய்து இந்தப் பெரியப்பா அடிக்கும் கூத்தைப் பற்றிச் சொல்லி விட்டால் என்ன என்று தோன்றியது. என்ன கல்யாணியிடமா? அந்தக் கணத்தில் அவன் மனதில் ஏற்பட்ட வெறியும் எரிச்சலும் தண்ணீர் பட்ட தீக்கங்கைப் போல அணைந்து விட்டன.

நாகசாமி அங்கிருக்கப் பிடிக்காமல் வந்த வழியே சென்றான். பெரியப்பா இருந்த வீட்டைத் தாண்டிச் செல்லும் போது உற்றுப் பார்த்தபடி சென்றான். அடையாளத்துக்காக அபிநை தியேட்டர் வாசலில் நின்று ஓலா புக் செய்தான். கைக் கடிகாரத்தைப் பார்த்த போது ஒன்பது என்றது. அந்த நேரத்தில் வாடகைக்கு கார் கிடைப்பது கஷ்டம் என்று அவன் நினைத்தது போல இரு டிரைவர்கள் வர மறுத்து விட்டார்கள். அதன் பிறகு யாரோ ஒரு நல்லவன் வந்து சேர்ந்தான். வீட்டை அடையும் போது ஒன்பதே முக்கால் ஆகிவிட்டது.

அவன் வாசல் கேட்டைத் திறந்து நடைபாதை வழியாகக் கதவை அடைந்தான். காலிங் பெல் அருகே இருந்த பெயர்ப் பலகையில் நாலைந்து இலைகள் தொங்கிக் கொண்டிருந்தன. பகல் பொழுதில் வீசிய காற்றின் உபயம் என்று நினைத்தவாறே காலிங் பெல் சுவிட்சை அமுக்கினான். அவன் கை பெயர்ப்பலகையில் இருந்த இலைகளைத் தட்டி விட்டன. சியாமளா பி.ஏ.பி.எல். நோட்டரி என்ற பெயர் பலகையில் மின்னிற்று.

கதவு திறந்ததும் உள்ளே நுழைந்தான்.

“நன்னா இருக்கு நீங்க அடிக்கிற ராக்கூத்து. கார்த்தாலே எட்டு மணிக்குப் போயிட்டு ராத்திரி பத்து மணிக்கு வந்துண்டு! நன்னா உங்களைப் பிழிஞ்சு வேலை வாங்கறதுக்கு அவாளுக்குத் தெரிஞ்சிருக்கு. உங்களுக்குத்தான் பொண்டாட்டின்னு ஒத்தி தனியா காத்துண்டு இருப்பாளேன்னு கொஞ்சம் கூட அக்கறை கிடையாது” என்று சரமாரியாகப் பொழிந்தவளிடம், “ஸாரி சியாமளி, ஸாரிடா” என்றபடி நாகசாமி கால்களைக் கழுவ வீட்டின் உள்ளே சென்றான்.

“ஸிந்துஜா” <weenvy@gmail.com>

# நாவலாசிரியர் போல் நாடக ஆசிரியன் கடுமையாக உழைக்க வேண்டும்

நேர்காணல்: **டென்னஸி வில்லியம்ஸ்**

கண்டவர்: **டாட்ஸன் ரேடர்**

தமிழில்: **ஸிந்துஜா**

முன் குறிப்பு: அமெரிக்காவின் ஒப்பற்ற நாடக ஆசிரியரான டென்னஸி வில்லியம்ஸின் இந்த நேர்காணல் 1981ஆம் ஆண்டு 'பாரிஸ் ரிவியூ' இதழில் வெளிவந்தது. நேர்காணல் செய்தவரும் ஒரு புகழ்பெற்ற நாடக ஆசிரியர். இரு பகுதிகளாக வெளியாகும் இந்த நேர்காணல் வழக்கமான கேள்வி-பதில் போல இல்லாமல் நாடகம், குடும்பம், சமூக நெறிகள், அமெரிக்கர்களின் மனோபாவங்கள், நண்பர்கள், தலைசிறந்த கலைஞர்கள், எழுத்தாளர்கள், வாழ்க்கையில் குறுக்கிட்ட ஆண்கள், பெண்கள், சினிமா, காதல், காமம், நோபல் பரிசு என்று பல்வேறுபட்ட அவரது அனுபவங்களை தனி மொழியாக வெளியுலகின் முன் வைக்கிறது. அவரது சுயசரிதையை அவரே வெளியிடும் ஆவணத்துக்கு நிகராக இந்த நேர்காணல் விளங்குவதை வாசகர்கள் உணர முடியும். இனி டென்னஸி வில்லியம்ஸ்..

### படைப்பின் தோற்றுவாய்

நான் ஒரு பிறவி எழுத்தாளன் என்று நினைக்கிறேன். என் எட்டாவது வயதில் இது வந்து என்னிடம் ஒட்டிக்கொண்டுவிட்டது. அப்போது அரை வருடம் நான் படுக்கையில் கிடந்தேன். என் அம்மா நான் தொண்டைச் சதையை விழுங்கியதால் வந்த நோய் என்று கதை கட்டிவிட்டாள். பல வருஷங்கள் கழித்து 'டைம்' இதழில் என்னைப் பற்றி வந்த கவர் ஸ்டோரியில் என் அம்மாவின் இந்தக் 'கண்டுபிடிப்பைச்' சொல்ல நேர்ந்த போது டாக்டர்கள் திடுக்கிட்டு, 'மருத்துவ சரித்திரத்தில் இது நடந்ததே யில்லை!' என்றார்கள். ஆனால், ஒரு இரவில் நான் சாகப்போகும் நிலைமைக்குத் தள்ளப்பட்டுவிட்டேன். அல்லது அப்படி நினைத்தேன். வினோதமான உணர்ச்சி ஒன்று என்னில் கிளர்ந்து எழுந்தது. நான் ஏதோ தகதகக்கும் ஒளியைப் பார்ப்பதாக எண்ணினேன். எலிசபெத் டெயிலருக்கும் இது மாதிரி ஒன்று நடந்தது. ஆனால், அன்றிரவு நான் பிழைத்துவிட்டேன். அது என் வாழ்வின் திருப்பு முனை. என் உடல் அமைப்பு மாறிவிட்டது. என் பெர்சனாலிட்டியும் கூட. அந்தக் காய்ச்சல் வருவதற்கு முன்பு நாங்கள் இருந்த குடியிருப்பில் வசிக்கும் குழந்தைகளைப் போய் நான் அடித்துவிடுவேன். அவர்கள் கையில் வைத்திருக்கும் பொருள்கள் எல்லாம் என் கைக்கு வந்துவிடும்.

ஆனால், அந்தக் காய்ச்சல் வந்துவிட்டுப் போனதற்குப் பின் நான் வீட்டோடு அடங்கிக் கிடப்பவனாகிவிட்டேன். நான் தனியாக என்னுடன் விளையாடிக் கொண்டிருப்பேன். நான் கூறுவது சுய இன்ப விளையாட்டு பற்றி அல்ல. நான் என் உக்கிரமான கற்பனை உலகில் வாழ ஆரம்பித்திருந்தேன். இதன் தொடர்ச்சியாக நான்

எழுத்துக்கு வந்தேன். என் பனிரெண்டாவது வயதில் எழுத ஆரம்பித்தேன்.

## அம்மாவும் மிஸ் ரோஸூம்

என் அம்மாவின் பெயர் மிஸ் எட்வினா. அவள் என் அக்கா ரோஸை விட அதிக உளப்பித்து கொண்டவள். அவள் மனநிலை காரணமாக அவள் செயின்ட் லூயிஸ் நகரத்தில் தனித்து விடப்பட்டாள். அவள் முதுமை அடைவதற்கு முன்பே 1950களின் ஆரம்பத்தில் நிகழ்ந்தது இது. நான் அப்போது வர்ஜின் ஐலண்டில் இருந்த செயின்ட் தாமஸில் குடியிருந்தேன். ஒரு நாள் அவள் என்னைக் கூப்பிட்டாள்.

"டாம், நான் யாரென்று நீ சொல்லு பார்க்கலாம்."

"அம்மா, நீ வீட்டில் இல்லையா?"

"இல்லை. என்னை ஒதுக்கித் தனியாக ஓரிடத்தில் உட்கார்த்தி வைத்திருக்கிறார்கள்."

அவள் தனிமையில் தனது உலகத்தில் வாழ்ந்தாள். செயின்ட் லூசியாவில் உள்ள கறுப்பினத்தவர் ஒன்று கூடிப் புரட்சியில் ஈடுபடுகிறார்கள் என்றும் குப்பைப் பைகளை வீசியெறிந்து தங்களுக்குள் சமிக்ஞைகளைப் பரிமாறுகிறார்கள் என்றும் முறை யிட்டாள். குடும்ப மருத்துவரை அழைத்து இம்மாதிரி பீதியளிக்கும் விஷயங்களைச் சொன்னாள். அவர், அவளைப் பைத்தியக்கார மருத்துவ மனையில் சேர்த்துவிட்டார். விஷயத்தைக் கேள்விப்பட்டு நான் செயின்ட் தாமஸிலிருந்து ஓடி வந்தேன்.

அவளுடன் நான் இருந்த போது ஒரு நாள் போன் வந்தது. அதை அவள் எடுத்தாள். மறுமுனையிலிருந்து சத்தம் வரவில்லை. அவள், "நீ யாரென்று எனக்குத் தெரியும். உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன். இதற்கெல்லாம் பயப்படுகிற பேர்வழி இல்லை நான்" என்றாள்.

என் அம்மாதான் என் அக்காவுக்கு லோபோடமி (மூளையின் வெளிப்பகுதி மடலை / சதையைச் சரி செய்வது) ஆபரேஷனுக்கு ஏற்பாடு செய்தாள். நான் அயோவா பல்கலைக் கழகத்தில் இருந்தேன். கடிதம் வந்தது. அம்மாதிரி ஆபரேஷன் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கவில்லை. ஆனால், அது வெற்றிகரமான முயற்சி என்று என் அம்மா சொன்னாள். அது வேண்டாம் என்று என் தந்தை தடுத்தார். ஆனால், அதற்குள் ஆபரேஷன் முடிந்துவிட்டது. அப்போது அந்த மாதிரி என் தந்தை வாய்விட்டுக் கதறி அழுதது அதுதான் முதல் தடவையாக நான் பார்த்தது. அந்த சிகிச்சையை மேற்கொண்டது சரியில்லை என்று பின்னர் பலரும் சொன்னார்கள்

ஆனால், அதற்காக நான் என் தாய் மீது கோபம் கொள்ளவில்லை. நானும் என் அக்காவும் ஒருவரை ஒருவர் மிகவும் நேசித்தோம். அதனால், அவள் இம்மாதிரி அனுபத்தை எதிர்கொண்டது எனக்கு வருத்தத்தை அளித்தது. என் அம்மா ஒரு மகா முட்டாள்தனத்துடன் செயல்பட்டதாக எனக்குத் தோன்றியது.

எதற்காக இந்த ஆபரேஷன் நடந்தது? என் அக்கா படாடோபமாக சில விஷயங்களை என் அம்மாவிடம் சொன்னாள். அதைக் கேட்டு என் அம்மா அதிர்ந்துவிட்டாள். மருத்துவ மனையில் என் அக்காவை நான் பார்க்கச் சென்ற போது அம்மாவை அதிர்ச்சிக் குள்ளாக்குவதற்காகவே தான் பேசியதாகச் சொன்னாள். அவளுக்கு என் தாயின் மீது ஒரு வித வெறுப்பு இருந்தது. என் அக்காவின் யௌவனப் பருவத்தில் அம்மா மிகக் கடினமான ஒழுக்க நெறிகளைப் புகட்ட முயன்று தன்னைக் காயப்படுத்தியதாகக் கூறினாள். அதனால், அவள் அம்மாவிடம் "எங்கள் கல்லூரியில் நாங்கள் தொழுகை மேடையில் இருக்கும் மெழுகுவர்த்திகளைத் திருடி சுய இன்பம் காண உபயோகிப்போம்" என்றாளாம். என் அம்மா கூக்குரலிட்டு அவளைக் கண்டித்திருக்கிறாள். போதாதற்கு நேரே தலைமை மருத்துவரிடம் போய்த் தன் பெண்ணுக்கு மூளை கலங்கிவிட்டதால் அவள் பேசாமல் இருக்க உடனடியாக ஏதாவது செய்யுமாறு கேட்டிருக்கிறாள். ஆபரேஷன் நடந்துவிட்டது.

என் அம்மாவுக்கு உடலுறவு என்றால் ஒரே பயம். கணவனும் மனைவியும் உடலுறவு கொள்கையில் கட்டிடமே கிடுகிடுத்துப் போகும் அளவு கூக்குரலிடுவாள். அதைக் கேட்டு நாங்கள் எல்லோரும் பயந்து போய் அண்டை வீடுகளில் புகுந்துகொள்வோம். என் தாய் அவள் இறப்பதற்கு ஒரு வருடம் முன் தனது அறையில் ஒரு குதிரை இருப்பதாகவும் அது தான் செல்லும் இடத்துக்கு எல்லாம் கூடவே வருவதைப் பார்த்துத் தனக்குப் பயமாக இருக்கிறது என்றும் கூறினாள். உண்மையில் அவள் ஒரு குதிரைக் குட்டியைத் தன் குழந்தை போல் வளர்க்க விரும்பினாள். ஆனால், கற்பனையில் குதிரை வந்த போது அவள் மிகவும் பயந்துவிட்டாள்.

ரோஸ் மிக அதிகமாகப் புகை பிடிப்பாள். ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்து ஒரு பிராண்டின் பெயரைச் சொல்லி, "இது உங்களிடம் எவ்வளவு இருக்கிறது? எனக்கு எல்லாம் வேண்டும்" என்பாள். அல்லது ஒரு கடைக்குள் சென்று, "ஐவரி சோப் இருக்கிறதா? எவ்வளவு இருக்கிறது? இவ்வளவுதானா? எனக்கு இருபது பாக்கெட்டுகள் வேண்டும்" என்பாள். உலகப் புகழ் பெற்ற, 'மியூசியம் ஆப் ஃ மாடர்ன் ஆர்ட்' நிறுவனர்களில் ஒருவரான மிஸஸ் முர்ரே கிரேன் வீட்டுக்கு நாங்கள் சென்றோம். ரோஸ், பூ வேலைப்பாடு நிறைந்த தன்னுடைய பெரிய கைப்பையும்எடுத்துக்கொண்டுவந்தாள். உணவருந்தும் போது அவள் முர்ரேயிடம், "சிகரெட்?" என்று கேட்டாள். "இல்லை, நான் சிகரெட் பிடிப்பதில்லை. ஆனால், ரோஸ் நீ நிறையப் பிடிக்கிறாய்" என்றார்



முர்ரே. அதனால், மனத்தாங்கலுற்ற ரோஸ் இரவு உணவு முடிந்ததும் வெளியே சென்றாள். வெகு நேரம் கழித்துத் திரும்பி வந்தாள். சாண்டா க்ளாஸின் பரிசுப் பொருள் நிரம்பிய பெரிய பை போல ரோசின் கைப்பை காணப்பட்டது. முழு வீட்டையும் அங்கிருந்த நாலைந்து கழிவறைகளையும் சோப் மற்றும் டாய்லெட் பேப்பரை வைத்து சுத்தம் செய்து பைக்குள் அடைத்து வைத்திருந்தாள். இந்த சம்பவத்துக்குப் பிறகு மறுமுறை நாங்கள் அங்கே அழைக்கப்படவில்லை.

ரோஸ் எப்போதும் பதட்டமாக இருப்பாள். கே வெஸ்டில் இருந்த போது புகை பிடிக்கக் கூடாது என்று எல்லா வீட்டு வேலைகளையும் இழுத்துப்போட்டுக் கொண்டு செய்தாள். முழு நாளும் வேலை செய்ய வேண்டும் என்று செடிக்குத் தண்ணீர் ஊற்றுகிறேன் என்று போகிறவள் வீட்டிலிருந்து ஒரு தம்ளரில் நீரை எடுத்துக்கொண்டு செடிக்கு ஊற்றுவாள். மறுபடியும் வீட்டுக்குள் வந்து ஒரு தம்ளர் தண்ணீர் எடுத்துக்கொண்டு தோட்டத்துக்குப் போய் செடியில் விடுவாள். இப்படி நூற்றுக் கணக்கான முறை செய்வாள். அவள் எப்படி வேலையில் தன்னைக் கரைத்துக்கொள்கிறாள் என்று நான் உணர்ச்சி வசப்படுவேன்.

நான் ரோஸை மிகவும் நேசித்தேன். கடுங்காவல் நிரம்பிய மனநல மருத்துவமனையில் அவள் காதில் சதா விழுந்த ஒரு வார்த்தை: 'நோ'. பின்னாள்களில் நான் அவளிடம் சாதாரணமாக ஏதாவது சொன்னால் கூட -"ரோஸ் கொஞ்ச நேரம் படுத்து ரெஸ்ட் எடுத்துக்கொள்ளேன்" - அவள் பதில் 'நோ'. ஒரு முறை சிலர் வீட்டுக்கு வந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் சற்று விரசமான ஜோக்குகளை அடித்து சிரித்துக் கொண்டிருந்தார்கள். இதை ரோஸ் விரும்பவில்லை. அவள் எழுந்து அறையின் ஒரு மூலைக்குச் சென்று கை கூப்பி நின்றாள். எங்கள் கஸின் ஸ்டெல்லா அவளிடம் போய்க் கேட்டதற்கு, "இவர்களுக்கான பாவ மன்னிப்பை வேண்டிக் கொண்டிருக்கிறேன்" என்றாள்.

## வெற்றி

1944இல் சிகாகோவில் அது ஆரம்பித்தது. அங்குதான் என் வாழ்வின் மகிழ்ச்சியான சில தருணங்களை அனுபவித்தேன். 'கண்ணாடிச் சிறைக்கூண்டு' நாடகத்துக்காக அங்கே நாங்கள் மூன்றரை மாதங்கள் தங்கியிருந்தோம். டிசம்பர் இறுதியிலிருந்து நடு மார்ச் வரை நாடகம் நடந்தது. பல பல்கலைக்கழக மாணவர்களின் நட்பு கிடைத்து இனிமையாகக் கழிந்த காலமது.

சிகாகோவைச் சேர்ந்த கிளாடியா கேசடி, ஆஷ்டன் ஸ்டிவென்சன் (அமெரிக்காவின் புகழ்பெற்ற நாடக விமரிசகர்கள்) ஆகிய இருவரும்தான் என் நாடகத்தின்

பெரும் வெற்றிக்குக் காரணமாயிருந்தார்கள். நாடக அரங்கேற்றத்தின் முதல் நாளன்று இம்மாதிரியான முற்றிலும் வித்தியாசமான நாடகத்தை இதற்கு முன்னால் கண்டிராத பார்வையாளர்கள் திகைப்பில் ஆழ்ந்திருந்தார்கள். மேற்சொன்ன இருவரும்தான் என் நாடகத்தின் நுணுக்கங்களை, அதன் உயர்ந்த தரத்தைப் பற்றி விரிவாகவும் அழுத்தமாகவும் பேசி மெருகேற்றினார்கள். நாடகத்தின் கதாநாயகியான லாரெட் டெய்லரை உலகப் புகழ்பெற்ற நடிகையான எலனோரா டூஸினின் நடிப்புடன் ஒப்பிட்டுப் பேசி என் நாடகத்தின் வெற்றிக்கு வழி வகுத்தார்கள்.

'கண்ணாடிச் சிறைக்கூண்டு' நியூயார்க்கில் 1945இல் வெளியாகியது. அது அரங்கில் இடப்படும் முன்பே மூன்றை மாதத்துக்கான டிக்கட்டுகள் விற்றுத் தீர்ந்துவிட்டன. நியூயார்க்வழியாகப் பிரயாணம்செய்த பயணிகள் நியூயார்க்கில் இறங்கி இந்த நாடகத்தைப் பார்த்துவிட்டுச் சென்றார்கள். லாரெட்டின் சிறந்த நடிப்புவேறு பார்வையாளர்களைக் கட்டிப்போட்டது.

புதிய வெற்றி? ஓ! ரொம்பவும் கஷ்டம்தான். இரவு நடந்த பெரும் வரவேற்புக் கூட்டத்தில் பங்கு பெற்றுவிட்டு விடிகாலையில் அறைக்கு வந்த என் முகத்தைப் புகைப்படங்களில் பார்த்திருந்தால் நீங்கள் அதிர்ந்து போயிருப்பீர்கள்!

இந்த நாடகத்துக்குப் பின் நான் தனியாக மெக்சிகோ சென்றேன். அது ஒரு கனாக் காலம்! அங்கு எனக்கு நியூயார்க் பில்ஹார்மோனிக்கின் இசை இயக்குனராயிருந்த லியோனார்டு பெர்ன்ஸ்டீனின் நட்பு கிடைத்தது. அதனால், நாட்டியமாடக் கற்றுக்கொள்ள முடிந்தது. நான் நன்றாக நடனத்தில் தேர்ச்சி பெற்றாலும், எழுத்துப் பணிக்காக அதை உதற வேண்டி வந்துவிட்டது.

'கண்ணாடிச் சிறைக்கூண்டு'க்கு முந்தைய காலத்தில் நான் பணமில்லாமல் ஆதரவு அற்றவனாகத் திரிந்தேன். ஒரு கட்டத்தில் சாவு என்னை வந்து இறுக்கும் கட்டத்துக்குத் தள்ளப்பட்டேன். கடவுளின் அருளில் முதல் நாடகம் பெரும் வெற்றிபெற்று என் வாழ்க்கையையே மாற்றி அமைத்தது. அப்போது எனக்கு முப்பத்தி நான்கு வயது. ஓட்டலில் பார்களில் மேஜை துடைப்பவனாக, லிப்ட் அட்டெண்டராக, தட்டச்சு செய்பவனாக கைக்கும் வாய்க்கும் போதாத சம்பளத்தில் கிடைத்த வேலைகள் என்னை முற்றிலும் ஒடுக்கிவிடும் சக்தியைப் பெற்றிருந்தன. முன்பே சொன்னபடி நான் என்னுடைய பனிரெண்டு வயதிலேயே எழுத ஆரம்பித்துவிட்டேன். என் டீன் ஏஜில் தினமும் எழுதினேன். கூடவே காலணித் தொழிலில் இருந்ததால் இரவு முழுவதும் காப்பி குடித்தபடி எழுதுவேன். விடிகாலையில் களைப்புடன் சரியாக உறங்கக் கூட முடியாமல் வேலைக்குச் செல்ல வேண்டும். இதனால், என் உடல்நிலை சீர் குலைந்தது. கடவுள் அருளால் முதல் நாடகம் மட்டும் வெற்றியடையாமல் இருந்திருந்தால் அடுத்த ஒரு வருஷத்தை நான் எப்படிக் கடந்திருப்பேன் என்று எண்ணிப் பார்க்கவே இப்போதும் கூட அச்சமாயிருக்கிறது.

## எங்கிருந்து நாடகங்கள் வருகின்றன?

இது எப்படி வருகிறது என்று என்னால் குறிப்பிட்டுச் சொல்ல முடியவில்லை. ஏதோ ஒரு ஆவி என்னுள்ளே புகுந்து இயக்குவது போலவும் இருக்கிறது. ஆரம்பத்தில் தெளிவற்று வரும் கருத்து பின்னர் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவான உருவத்தைக் கொண்டு வருகிறது. 'கண்ணாடிச் சிறைக்கூண்டு'க்குப் பிறகு, 'ஸ்ட்ரீட்கார் நேம்ட் டிசையர்' வந்தது. இளமையின் கடைவாசலில் நிற்கும் ஒரு பெண்ணின் உருவம் ஓர் சித்திரமாக எனக்குள் உருவானது. ஒரு ஜன்னலருகே வெளியே நிலவொளியைப் பார்த்தவாறு தனிமையில் ஒரு பெண் நாற்காலியில் அமர்ந்திருக்கிறாள். அவள் முகம் இருண்டிருக்கிறது. அவளை மணக்க இருப்பவன் அவளருகில் நிற்கிறான்.

இது என் அக்காவைப் பற்றிய நினைவுகளால் எழுந்தது என்று நான் நம்புகிறேன். இண்டெர்நேஷனல் காலணிக் கம்பனியில் வேலை பார்த்த ஓர் ஒப்பற்ற அழகுடைய இளைஞனை அவள் காதலித்தாள். போன் அடிக்கும் போதெல்லாம் அவளுக்கு மயக்கம் வந்துவிடும். தன்னை வெளியே அழைத்துச் செல்வதற்காக வரும் அழைப்பு என்று. ஒவ்வொரு இரவும் அவர்கள் சந்தித்தார்கள். அவன் ஒரு நாள் அவளைக் கூப்பிடவில்லை. அன்றுதான் ரோஸின் மனநிலையில் மாறுதல் ஏற்பட்டது. இந்தப் பின்னணியில்தான், 'ஸ்ட்ரீட்கார் நேம்ட் டிசையர்' உருவானது. முதலில், 'நிலவில் ப்ளாஞ்ஜின் நாற்காலி' என்ற தலைப்பைத்தான் வைத்தேன். ஆனால், இது ஒரு சகிக்கவொண்ணாத தலைப்பு என்று தோன்றி விட்டது!

ஆனால், என் சகோதரியுடன் நட்பிலிருந்த இளைஞன் நாடகத்தில் வரும் ஸ்டான்லியைப் போன்றவன் அல்லன். அவன் ஐ வி லீக் பள்ளியில் கல்வி கற்ற இளநிலை அதிகாரி. அது அவனுக்கு வாழ்க்கையில் பல நன்மைகளைத் தந்தது. வாழ்க்கையில் முன்னேறத் துடிக்கும் இயல்பு கொண்டவனாய் இருந்தான். அப்போது என் தந்தை காலணி அலுவலகத்தில் உயரதிகாரியாக இருந்தார். இது அவனது முன்னேற்றத்திற்கு உதவும் என்று அவன் நினைத்திருக்கலாம். ஆனால், துரதிர்ஷ்டவசமாக என் தந்தை கம்பனியில் ஒரு சிக்கலில் மாட்டிக்கொண்டு வேலையை இழக்கும் நிலைக்கு வந்து அதன்பிறகு அதிலிருந்து தப்பித்துவிட்டார். ஆனால், இந்த நிலைமை அவர் கம்பனியில் டைரக்டராக போர்டில் பதவி உயர்வுபெறும் வாய்ப்பை அழித்துவிட்டது. இது தவிர ஒரு முறை சீட்டாட்டத்தில் சண்டை ஏற்பட்டு அவரது காது சேதமாயிற்று. அதற்கான ஆபரேஷனை செய்து முடித்த பின் அவரது காதை



ஒட்டி ஒரு சிறிய காலிப்ளவர் போன்ற சதை தொங்கிற்று. இதை அவர் லிப்டில் போகும்போதும் வரும்போதும் பலர் கேலி செய்ய ஆரம்பித்தார்கள். அது ஒரு பத்திரிகைச் செய்தியாகவும் ஆகிவிட்டது. இந்தச் சமயத்தில்தான் ரோஸின் காதலன் அவளுடன் பேசுவதை நிறுத்திவிட்டான்.

'கண்ணாடிச் சிறைக்கூண்டு', 'ஸ்ட்ரீட்கார் நேம்ட் டிசையரை' விட மெதுவாக உருவானது. அந்த நாடகத்துக்கு நான் செலவிட்ட நாள்களை வேறு எந்த நாடகத்துக்கும் நான் செலவழிக்கவில்லை. அது முதலில் சிறுகதையாகத்தான் உருவானது. அது எனக்கு மிகவும் பிடித்த சிறுகதை.

### பாதிப்புகள்

**இளைஞனாக உங்களைக் கவர்ந்த எழுத்தாளர்கள் யார்?**

செக்காவ்.

**நாடக ஆசிரியர்?**

செக்காவ்.

**கதாசிரியராக?**

செக்காவ்.

செக்காவுடன் டி.ஹெச்.லாரன்சும் கூட. லாரன்ஸ் பாலுணர்வுகளைச் சிறப்பாகப் புரிந்துகொண்டு கையாண்ட மேதை. வாழ்க்கையையும் கூட.

### விளைவுகள்

நான் எழுத ஆரம்பிக்கும் போது எவரையும் அதிர்ச்சிக்கு உள்ளாக்க வேண்டும் என்று நினைத்து எழுதுவதில்லை. ஆனால், எப்போதும் நான் நினைப்பது போல நடப்பதில்லையே. வாழ்க்கையில் நடப்பதை எழுத்தாளன் கண்டு ஒதுங்கக் கூடாது என்பது என் திடமான அபிப்பிராயம். கலையில் கலைத்தன்மைதான் முக்கியம். நான் உண்மையைச் சொல்லவே எப்போதும் முயலுகிறேன். உண்மை அதிர்ச்சி தருவதாக இருந்தாலும் கூட.

### திரும்பிப் பார்க்கையில்

நான் இப்போது என் வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கிறேன். நான் பார்ப்பது என்னைத்தானா? நான் இவற்றைச் செய்திருக்கின்றேனா? என் வாழ்க்கையில் தொடர்ச்சி என்பது இல்லை. என் வாழ்க்கை பல பிரிவுகளால் ஆனது. அவை ஒன்றுக்கொன்று இணைவதில்லை. எழுத்தின் திரைமறைவில் ஒவ்வொரு காலகட்டமும் நிகழ்ந்திருக்கிறது. அவ்வப்போது நான் திரையை விலக்கி வெளியே பார்க்கிறேன். நான் முற்றிலும் வேறான பிரதேசத்தில் நிற்பதை உணராமல் இருக்க முடியவில்லை.

பதினோரு வயதிலிருந்து பல்கலைக் கழகப் படிப்பை முடித்து வெளிவரும் வரை என்னுடைய முதல் காலகட்டமாக அது இருந்தது. பின் காலணி வியாபாரத்துக்குள் சென்றேன். ஹேஸல் என்னும் பெண்ணின் மீது எனக்கு அடங்காத காதல் ஏற்பட்டது. ஆனால், அந்தக் காலத்தில் நான் மிகவும் கூச்ச சுபாவம் உடையவனாக இருந்தேன். முகம் வெட்கத்தில் சிவக்காமல் என்னால் யாரையும் பார்க்க முடிந்ததில்லை. உயர்நிலைப் பள்ளியில் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல வாய் வராது. குரலே எனக்கு எழும்பாது. ஆனால், எழுதச் சொன்னால் எழுதிவிடுவேன். என்னுடைய பாலுணர்வு ஆர்வத்துக்கும் என் அம்மாவின் கண்டிப்பு நிறைந்த கட்டளைகளுக்குப் பயந்து நடந்த என் குணத்துக்கும் ஏற்பட்ட மோதலின் விளைவுதான் இந்த வெட்க உணர்ச்சி என்று நினைக்கின்றேன். என் தந்தையும் அவர் பங்குக்கு என்னை அச்சமுறுத்துவராக இருந்தார். இது ஒரு காலகட்டம்.

அடுத்த கட்டம் மகிழ்ச்சியைத் தந்த ஒன்று. ஓரினச் சேர்க்கையாளர் உலகில் காலடி எடுத்து வைத்தேன். அது ஓர் புதிய உலகம்தான். அவ்வுலகு எனக்குத் தன்னம்பிக்கையைத் தந்து ஏதோ துணிவான செயலைச் செய்வது போன்ற உணர்வைத் தந்தது. ஆனால், 'கண்ணாடிச் சிறைக்கூண்டு' அடைந்த வெற்றி இந்தக் காலகட்டத்துக்கு ஒரு முடிவைக் கொண்டு வந்துவிட்டது. எப்போது வெற்றியுடன் சில பிரச்சனைகளும் சேர்ந்து வருகின்றன.

1960களில் நான் நன்றாக உழைத்து முன்னுக்கு வந்தேன். ஆனால், அறுபதுகளின் இறுதியில் நான் மனநோய்க் காப்பகத்துக்குச் செல்ல வேண்டியதா யிற்று. ஏனெனில், என் மருத்துவர் விரைவில் நலம் பெற ஊசிகளை ஏற்றும்போது என் குடிப்பழக்கத்தை நிறுத்திவிட வேண்டும் என்று கண்டிப்புடன் கூறி யிருந்தார். ஆனால், நான் இதைப் புறக்கணித்ததால் எனக்குச் சித்தப்பிரமை வியாதி ஏற்பட்டது. என் உடல் நலமும் ஞாபகச் சக்தியும் என்னைக் கைகழுவி விட்டன. நான் நியூயார்க் சென்ற போது முன்பு சந்தித்திருந்த நாடகத் தயாரிப்பாளர்களையும் அவர்களுடன் நடத்திய பேச்சு வார்த்தைகளையும் முற்றிலும் மறந்தவனாய் இருந்தேன். 'டோக்கியோ ஓட்டல் பாரில்' என்னும் நாடகம் பெரும் தோல்வியை அடைந்தது. என் உடல் நிலை சீர்குலைந்து வந்ததால் கே வெஸ்ட்டுக்கு அழைத்துச் சென்று தனியாக என்னை வீட்டின் மாடியில் தங்க வைத்தார்கள். அப்போது அங்கு புதிய சமையல் அறை கட்டப்பட்டுக் கொண்டிருந்தது. கட்டிட வேலையாட்கள் வேலை பார்த்துக் கொண்டிருந்த பின்முற்றத்தில் மின்சார ஸ்டவ் இயங்கிக் கொண்டிருந்தது. நான் ஒரு பாத்திரத்தை ஸ்டவ்மேல் வைக்கச் சென்று முடியாமல் தடுமாறி அடுப்பில் உட்கார்ந்துவிட்டேன். என் தோலின் மூன்று உள் அடுக்குகளும் தீக்கிரையாகி தோல் முழுதும் கறுத்துவிட்டது. (Third Degree Burns). அங்கு வந்த என் சிநேகிதி மரியா என் சகோதரன் டாகின்னை அழைத்து வந்தாள். நான் மனநலக் காப்பகத்தில் அடைக்கப்பட்டேன். என் சகோதரன் நான் இறக்கும் நிலையை அடைந்துவிட்டேன் என்று என் பாவமன்னிப்புக்கென என்னை ரோமன் கத்தோலிக்கனாக மாற்றிவிட்டான். மருத்துவ மனையில் மிகவும் கொடூரமான நாள்களைச் சந்தித்தேன். அங்கு என்னிடமிருந்த மாத்திரைகள், ஊசிகள் எல்லாவற்றையும் பிடுங்கி எடுத்துச் சென்றுவிட்டார்கள். நான் மயங்கிக் கிடந்தேன். எனக்கு ஒரே நாளில் மூன்று முறை மூளை அழற்சியும் ஒரு முறை இரத்தக் குழாய் உடைப்பும் ஏற்பட்டதாகப் பின்னர் சொன்னார்கள். நான் எப்படி உயிர் பிழைத்தேன் என்று தெரியவில்லை. நான் அங்கு மூன்றரை மாதங்கள் இருந்தேன். முதல் மாதம் வன்முறைக் கட்டுப்பாடு வார்டில் இருந்தேன். நான் வன்முறையாளன் அல்ல என்ற போதும் கூட. தினமும் நான் மிகுந்த பயத்துடன் ஒரு மூலைக்குச் சென்று படிக்க ஆரம்பிப்பேன். அங்குள்ள ஒரு தொலைக்காட்சிப் பெட்டிக்கு மூர்க்கமாக நோயாளிகள் சண்டை போடுவார்கள். ஒருவன் நியூஸ் போட்டால் இன்னொருவன் கார்ட்டூனுக்கு மாற்றுவான். சண்டை ஆரம்பித்துவிடும். அவர்கள் வன்முறையாளர்களாக இருந்ததில் ஆச்சரியப்பட ஏதுமில்லை.

## கிறிஸ்துவம்

நான் கத்தோலிக்கக் குடும்பத்தில் பிறந்து அதில் நாட்டமுடையவனாக இருந்தேன். என் தாத்தா ஒரு மிகச் சிறந்த தேவாலயத்தில் பாஸ்டர்களுக்கும் மேலே உயர்ந்த நிலையில் இருந்தார். ஒரு விதத்தில் போப்பாண்டவருக்கும் மேலான ஸ்திதியில். ஆனால், என் சகோதரன் செய்த, 'கத்தோலிக்க மாற்றம்' நகைப்புக்குரிய ஒன்று. எனக்கு ரோமன் கத்தோலிக்க சமயம் மீது அவ்வளவு நம்பிக்கை கிடையாது. ஆனால், டாகின் ஏதோ செய்துவிட்டான், எனக்கு விடுதலை வாங்கித் தருவது போல!

என் படைப்புகள் கிறிஸ்துவ அடையாளங்கள் நிரம்பியவை. நான் மிக மிக ஆழமான நம்பிக்கை உடைய கிறிஸ்தவன். என்னை எப்போதும் கவருவது கிறிஸ்துவின் உருவம்...எனக்கு மறுபிறப்பில் நம்பிக்கை கிடையாது. நாம் எங்கேயிருந்து வந்தோமோ அங்கேதான் இறக்கி விடப்படுகின்றோம்.

## கவிதை

நான் ஒரு கவிஞன். நான் கவிதைகளை என் நாடகத்தில் கொண்டு வருகிறேன். சிறுகதைகளில் கூட. கவிதை என்றால் கவிதைதான். அதைப் பாட்டு என்று கூற வேண்டியதில்லை.

## இளம் எழுத்தாளர்கள்

அவர்கள் எழுத்தாளர்களாக ஆக வேண்டும் என்றிருந்தால் அவர்கள் அப்படியேதான் ஆவார்கள். அதை யாராலும் தடுக்கவோ மாற்றவோ முடியாது. அது அவர்களைச் சாகடிக்கக் கூடும். அவர்கள் மோசமான அவமதிப்புகளை, தலைகுனிவை, வறுமையை, வாழ்க்கை அளிக்கும் அதிர்ச்சிகளை எதிர்கொள்ள முடியாமல் தவிப்பார்கள். ஆனால், வாழ்க்கையைப் பார்த்து நகைக்கும் இயல்பான குணம் அவர்களிடம் படிந்து அவர்களைக் காப்பாற்றிவிடும்.

## எழுதுவது

நான் எழுதும் போது என் கற்பனைகள் காட்சிகளாக விரியும். வெளிச்சம் மிகுந்த மேடையில் காண்பது போன்ற உணர்வைத் தரும். நான் வரிகளை உருவாக்கும் போது வாய்விட்டுப் பேசியபடி எழுதுவேன். நான் ரோமில் இருந்த போது என் வீட்டின் சொந்தக்காரி என்னை புத்தி சுவாதீனம் இல்லாதவன் என்று நினைத்துவிட்டாள். அவள் என் நெருங்கிய நண்பனிடம், "ஓ, மிஸ்டர் வில்லியம்ஸ் சித்தத்தை இழந்தவரா? அறைக்குள் நடந்தபடி உரத்த குரலில் பேசுகிறார்!" என்றாள். அவன் அவளிடம், "இல்லை, எழுதும் போது அவன் அப்படி நடந்துகொள்வது வழக்கம்" என்றான். ஆனால், அவள் அதைப் புரிந்துகொள்ளவில்லை.

## திரும்ப எழுதுதல்

நான் எழுத ஆரம்பிக்கும் போது அது



பெரும்பாலும் திசை தவறிய பறவையைப் போல எங்கோ போய்விடும். அதன் பின் எழுதியவற்றில் பல பகுதிகளை நீக்கிச் சரி செய்வேன். இப்போது எழுதிக்கொண்டிருக்கும் 'நிரந்தர அனுமதிச் சீட்டு' என்னும் மீமெய்யிய நாடகத்தில் இது அதிகமாகவே தலை காட்டிவிட்டது. இந்த நாடகத்தை நான் ஜோ ஆர்ட்டனுக்கு (பிரபல நாடக ஆசிரியருக்கு) சமர்ப்பிக்க இருக்கிறேன். இப்போது மூன்றாம் முறையாகத் திருத்தி எழுதிக் கொண்டிருக்கிறேன்.

நான் அதிக அளவில் திருத்தி எழுதும் வழக்கத்தைக் கொண்டிருக்கிறேன். ஒரு நாடகம் முடிந்ததென்று நான் நினைத்தபின் அது தயாரிப்பில் இறங்கும் போது அதுவும் என்னைத் திருப்திப்படுத்த வேண்டும். எனக்குத் திருப்தி தரும் என் நாடகங்கள் வழக்கமாக என் விமர்சகர்களுக்குத் திருப்தி அளிப்பதில்லை. குறிப்பாக நியூயார்க்கில், நான் சட்டதிட்டங்களுக்கு உட்படாத படு பயங்கரமான ஆசாமி என்று அவர்கள் நினைக்கிறார்கள்.

## வாசகர்

நான் எழுதும் போது என் வாசகரை மனதில் நிறுத்திக்கொண்டு எழுதுவதில்லை. நான் எனக்காக எழுதுகிறேன். நாடகப் படைப்பில் பல வருஷங்கள் ஊறிய அனுபவத்தில் என் உள்ளுணர்வு கூறுவதே எனக்கு வேதவாக்கு. ஒரு நாடகம் எவ்விதம் மேடையில் பரிமளிக்கும் என்று எனக்குத் தெரிந்துவிடுகிறது. என் உள்ளுணர்வையும் புலனறிவையும் நாடகம் திருப்திப்படுத்த வேண்டும். அவையே என் வாசகப் பரப்பை உள்ளடக்கியவை.

## இயக்குனர்கள்

சில சமயங்களில் என் உள்ளத்தில் இடம் பெற்றவரை வைத்து எழுதுகிறேன். உதாரணமாக நான் எலியா காசனை மனதில் வைத்து எழுதுகிறேன். அவர் இப்போது பெரும்பாலும் இயக்குவதை நிறுத்திவிட்டாலும். அவரிடம் எனக்குப் பிடித்தது என்ன? மனிதர்களை சரியாகப் புரிந்துகொள்ளும் எல்லையற்ற சக்தி அவரிடம் படிந்திருக்கிறது

என்பதுதான். ஒரு கட்டத்தில் எலியா காசனும் ஜோஸ் க்விண்டேரோவும் சமமான திறமை உடையவர்களாய் விளங்கினார்கள். ஜோஸ் அவரது ஆரம்பிக்க காலப் படைப்புகளை நேர்த்தியாக உருவாக்கிய மனிதர். ஆனால், பின்னாளில் குடி அவரை சீரழித்துவிட்டது. அவர் நகரில் மிகவும் செல்வச் செழிப்பான இடத்தில் குடியிருந்தார். ஒரு நாள் நாங்கள் இருவரும் மாடியில் உலாவிக் கொண்டிருக்கையில் நான் ஜோஸிடம், "நீங்கள் ஏன் உங்களையே கொன்று கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் ஏன் இப்படிக் குடிக்க வேண்டும்? மிக அதிகமான குடி உங்களை அழித்துவிடும்" என்று சொன்னேன். ஜோஸுக்கு என்னை மிகவும் பிடிக்கும். என்னைப் பார்த்து, "நீங்கள் சொல்வது முற்றிலும் சரி. நான் திடீரென்று மற்றவர்களின் கவனத்தைப் பெறும் மனிதனாக உயர்ந்துவிட்டேன். இது என்னைப் பயமுறுத்துகிறது. நான் சாதித்ததெல்லாம் என் உள்ளுணர்வு என்னைச் செலுத்திய விதத்தினால்தான். ஆனால், திடீரென்று என் ரகசியமெல்லாம் வெளிப்பட்டுவிட்டதாக ஒரு பயம் ஏற்பட்டுவிட்டது. நான் அதிகமாக் குடிப்பதற்கு இதுதான் காரணம்" என்றார்

டேவிட் ஓர் இனிமையான மனிதர். அவர் பல சிக்கல்களை வாழ்வில் சந்தித்துக் கொண்டிருந்தாலும் பழகுவதற்குச் சிறந்த நண்பராய் விளங்கினார். நாங்கள் இருவரும் ஒரு முறை வாஷிங்டன் பல்கலைக்கழகத்தில் நடந்த நாடக வகுப்புக்குச் சென்றோம். ஒரு நாள் அவர் என் அறைக்கு வந்து, 'பூமியின் அரசாங்கத்தை' தான் டைரக்ட் செய்ய விருப்பம் தெரிவித்தார். நான் ஏதோ முணுமுணுத்தேன். அப்படித்தான் அப்போதெல்லாம் நான் பேசுவது வழக்கம்! "அது ஒரு வேடிக்கை நிரம்பிய நாடகம்" என்றார் டேவிட். நான் பதிலுக்கு, "கிர்ர்ர்ர்ர்ர்" என்றேன். அன்றிரவு நான் எப்படி இருந்தேன் என்று எதுவும் நினைவில்லை. ஆனால், அந்த நாடகத்தைத் டேவிட்தான் தயாரித்தார். .

'பூமியின் அரசாங்கம்' நாடகத் தயாரிப்பின் போது மிதமிஞ்சிய குடி ஜோஸை ஆக்கிரமித்தது. இதனால் கோபமுற்ற அப்படத்தின் கதாநாயகியான எஸ்டெல் பார்சன்ஸ் இனி தான் ஜோசின் இயக்கத்தில் நடிக்க முடியாது என்று கூறிவிட்டாள். டேவிட் என்னிடம் வந்து, "ஜோஸை நீக்கி விடப் போகிறேன். அவர் நாடகத்தைச் சீர்குலைக்கப் பார்க்கிறார்" என்றார். நான் டேவிட்டிடம், "நீங்கள் ஜோஸை நீக்கினால், நானும் விலகிக்கொள்கிறேன்" என்றேன். பின்னர் ஜோஸை வைத்து வேலையை முடித்தார்கள்.

### தலைப்புகள்

சில சமயம் நான் தேர்ந்தெடுக்கும் தலைப்பு பார்ப்பதற்கோ கேட்பதற்கோ இணக்கமாக இல்லாது போனாலும் நாடகத்தின் உயிரோட்டத்தோடு ஒத்துப் போயிருக்கும். உதாரணமாக, 'அஸ்திவாரமில்லாத வீடு' என்பது அழகான தலைப்பு. அது நாடகத்தில் காண்பிக்கப்படும் ரிப்பேர் செய்ய முடியாத, மழை நீர் ஒழுகுகின்ற வீடை மட்டுமல்ல, இன்றைய சமூகத்தின் அவல நிலையை எடுத்துக்காட்டும் ஓர் உருவகமாகவும் வெளிப்படுகிறது. விமர்சகர்களுக்கு இந்தத் தலைப்பு அல்லது உத்வேகம் தரும் அதன் அர்த்தம் பிடிக்காமல் போகலாம். அதனால், அவர்கள் இந்தத் தலைப்பை ஒத்துக்கொள்ளத் தயங்குவார்கள். அவர்களின் ரொட்டியில் வெண்ணை தடவிக் கொடுப்பது யார் என்று அவர்களுக்குத் தெரியும்.

சில சமயம் நாடகத்தில் வரும் உரையாடலிலிருந்து தலைப்பு கிடைக்கும். அல்லது நாடக மேடையின் அமைப்பு கூட. சில சமயம் நான் படிக்கும் கவிதைகளிலிருந்தும் கிடைக்கும். எனக்கு ஒரு தலைப்பு வேண்டுமென்றால் நான் ஹார்ட் க்ரேனின் கவிதைப் புத்தகத்தை எடுத்துக்கொள்வேன். நான் பிரயாணம் செய்யும் போது அதுவும் என்கூடப் பயணிக்கும். ஒரு கவிதையின் ஒரு வரி நாடகத்துக்குப் பொருத்தமான தலைப்பாக அமைந்துவிடும். நான் ஒரு தலைப்பையே மாற்றி மாற்றிப் பார்ப்பேன்.

கே வெஸ்டில் உள்ள ஒரு தேவாலயத்தின் பெயர்: மேரி, கடலின் நட்சத்திரம்! இதுவே ஒரு மிகச் சிறந்த தலைப்புதான்!

### வரி மாற்றம்

ஒரு நாடகத்தில் வரிகளை மாற்றுவது என்பது மிகச் சிறந்த கலைஞர்களால் மட்டுமே வெற்றிகரமாகச் செய்ய முடியும். உதாரணமாக ஜெரால்டைன் பேஜ். அவர் ஒரு மிகச் சிறந்த நடிகை. மிகவும் புத்திசாலியான பெண். சில சமயம், "இந்த வரியைப் படிக்கக் கஷ்டமாக இருக்கிறது" என்று சொல்லி மாற்றும் போது அதை ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை என்று நான் நினைப்பேன். பேஜ் ஒரு எழுத்தாளர் இல்லை என்றாலும் அவரது புத்திக் கூர்மை காரியத்தைச் சாதித்துவிடும். அவரைத் திருப்திப்படுத்த நான் மாற்றங்களைச் செய்ய ஒத்துக்கொள்வேன். ஆனால், நான் இப்படிச் செய்வது அந்த நடிகர்கள் புத்திசாலிகளாகவும் திறமைசாலிகளாகவும் இருந்தால் மட்டுமே!

### மார்லன் பிராண்டோ

நான் கேப்பில் இருந்த போது பிராண்டோ வந்தார். அவரில் கண்டடைய என்று எதுவும் இல்லை. அவ்வளவு வெளிப்படையான மனிதர். அவரைப் போன்ற ஒரு தீட்டப்படாத திறமைசாலியை நான் பார்த்ததில்லை. பிராண்டோ பிரபலமாவதற்கு முன்பே அவரை இங்கிதமான விரும்பத்தக்க மனிதராக நான் பார்த்தேன். முதல் தடவை நேரில் கண்ட போது வியப்பிலாழ்த்தும் அழகைப் பெற்றவரென்று உணர்ந்தேன். அவர் மிக இயல்பானவராக, உதவும் தன்மைகொண்டவராக இருந்தார். நீர் அடைத்துக்கொண்டிருந்த குழாயைச் சரி செய்தார்.




வெளிச்சம் போய்விட்ட விளக்குகளை எடுத்துவிட்டு மாற்று விளக்குகளைப் பொருத்தினார். ஓரிடத்தில் உட்கார்ந்து அமைதியாகப் படித்தார். ஒரு நாள் அவர் அப்படிப் படித்துக் கொண்டிருந்த போது எங்களுடன் தங்கியிருந்த மார்க்கோ ஜோன்ஸ் அங்கே வந்தார். ஐந்து நிமிஷம் கழித்து, "ஓ, இது நான் படித்த மிகச் சிறந்த புத்தகங்களில் ஒன்று!" என்று குதூகலத்துடன் கூவினார். அதன் பின்னர்தான் மார்லன் பிராண்டோ 'ஸ்ட்ரீட்கார் நேம்ட் டிசையர்' படத்தில் கதாநாயகனாக நடிக்க ஒப்பந்தம் செய்யப்பட்டார்.

## வாரன் பெட்டி

வாரன் பெட்டியை நான் சந்தித்த சமயம், 'தி ரோமன் ஸ்பிரீங் ஆஃப் மிஸஸ் ஸ்டோன்' நாடகத்துக்கு பலசாலியான ஆண் நடிக்கரைத்தேடிக் கொண்டிருந்தோம். ப்யூர்டோ ரீகோவில் ஒரு நாள் நான் மரியானுடன் சூதாட்டத்தில் இறங்கிஇருந்தேன்! அப்போது ஒரு பணியாள் வெள்ளித் தட்டில் பால் நிரம்பிய கிண்ணம் ஒன்றைக் கொடுத்து,"ஒரு கனவான் இதை உங்களிடம் கொடுக்கச் சொன்னார்" என்றார். "எனக்கு இந்தக் கேலிக் கூத்தெல்லாம் பிடிக்காது" என்று அதை ஏற்க மறுத்துவிட்டேன்.

நான் கொண்டு வந்திருந்த பணத்தை இழந்த பின் நாங்கள் இருவரும் அங்கிருந்து கிளம்பினோம். வாசலில் வாரன் பெட்டி! என்னைப் பார்த்துத் தலையாட்டினான்."ஹலோ வாரன்!" என்றேன் நான்.

"டென்னஸ்ஸி , உங்களைப் பார்க்கத்தான் வந்திருக்கிறேன்" என்றான்.

"எதற்கு வாரன்? நீ ஒன்றும் பலசாலியான ஆள் இல்லையே!" என்றேன் நான்.

"நான் வித்தியாசமான உச்சரிப்புடனும் சாதாரண உச்சரிப்புடனும் உங்களிடம் படித்துக் காட்ட ஹாலிவுட்டிலிருந்து வந்திருக்கிறேன்" என்றான்.

நானும் மரியானும் அவனது அறைக்குச் சென்றோம். அவன் சொன்னதைச் செய்து காண்பித்தான்.(அதில் நடிக்க வாரனுக்கு வாய்ப்புக்கு கிடைத்தது.)

வாரனிடம் சங்கோஜம் என்பது மருந்துக்கு கூட கிடையாது. என்னைக் காணும் போதெல்லாம் வந்து அணைத்துக்கொள்வான். அதில் அன்பும் பாசமும் புத்துணர்வும் நிரம்பி வழியும். நான் பல நடிகர்களிடம் இத்தகைய அன்பைக் கண்டிருக்கிறேன். சிலரிடம் இல்லை.

## ஆட்ரி வுட்

என்னுடைய நெடுங்கால ஏஜென்ட்டான ஆட்ரி வுட்டுடன் எப்படிப் பிரிவு ஏற்பட்டது? அந்த சண்டைக்கு நான் காரணமல்ல. நான் வழக்கமான முறையில்தான் நடந்துகொண்டேன். அவளும் அதற்குப் பழக்கமானவள்தான். ஆனால், ஒரு நாடகத்தில் முதல் நாள் முன்னோட்டக் காட்சி சிறப்பாக அமைந்துவிட்டது. (அதை ஆட்ரி ஒத்துக்கொள்ளவில்லை.)இரண்டாம் முன்னோட்டம் நடைபெற்ற தினத்தன்று வந்த நடிகைகள் சற்று வயதானவர்களாக இருந்தார்கள். அவர்கள் நான் எதிர்பார்த்த அளவிற்கு சோபிக்கவில்லை என்று நான் கோபத்தில் இருந்தேன். நான் யாரையும் தேர்ந்தெடுக்கவில்லை என்று அந்த நடிகைகள் புகார் கூறினார்கள். இது எனக்கு மேலும் எரிச்சலை ஏற்படுத்திற்று. நான் கோபம் அடையும் போது நிதானத்தை இழந்துவிடுவேன். இது ஆட்ரிக்கும் தெரியும். நான் அவளிடம், "இப்போது உனக்குத் திருப்திதானே? நேற்றைய முன்னோட்டம் உனக்குப் பிடிக்கவில்லை என்றாயே" என்றேன். அவள் கோபமடைந்து வெளியே போய்விட்டாள். இந்தச் செயல் அவளுக்குப் பெரிய விளம்பரத்தை வேறு ஏற்படுத்திக் கொடுத்துவிட்டது. அவள் என்னை முற்றாகப் புறக்கணித்துவிட்டாள் என்பதை, நான் ஏழாண்டுகள் மனநோயில் தத்தளித்துக் கொண்டிருந்த போது ஒரு முறை கூட வந்து பார்க்கவில்லை என்பதை உணர்ந்த போதுதான்.

ஆனால், நான் வழக்கமாக யார் மீதும் காட்டம்கொள்வதில்லை. அதனால், ஒரு நாள் ஹோட்டல் ஒன்றில் அவளைப் பார்த்த

போது சிரித்தபடி கை நீட்டினேன். அவள் ஒரு பாம்பைப் போல மூச்சுவிட்டுத் தன் கையை இழுத்துக்கொண்டாள். ஏதோ நான் ஒரு குஷ்டரோகி என்பது போல. ஆட்ரியின் தொழில் முன்னேற்றமும், அதனால் அவள் வாழ்க்கையில் பெற்ற செல்வமும் செல்வாக்கும் என்னால் ஏற்பட்டது என்றாலும் அவள் இம்மாதிரி மாறியது பற்றி நான் நினைத்து வருத்தம்கொள்ளவில்லை.

## சிறந்த நண்பர்கள்

கார்சன் மெக்குல்லர்சும் ஜேன் பௌல்சும் என்னுடைய மிகச் சிறந்த எழுத்தாள நண்பர்கள். கார்சன் அவளுடைய முப்பதாவது வயதில் பக்கவாத நோயால் தாக்கப்படாமல் இருந்திருந்தால், அமெரிக்கா ஒரு உலகப் புகழ்பெற்ற ஒப்பற்ற எழுத்தாளரை உலகுக்குத் தந்திருக்கும். தொடர்ந்து வந்த காய்ச்சல் உடலின் எதிர்ப்புச் சக்தியைக் குறைத்து அவளை எதுவும் செய்யவொட்டாமல் அடித்தது. இம்மாதிரி பத்து வருஷங்கள் கஷ்டப்பட்டாள். நான் அவளுடைய, 'தி மெம்பர் ஆப் தி வெட்டிங்' நாவல் குறித்து ஒரு கடிதம் எழுதினேன். அது ஒரு மிகப் பிரமாதமான நாவல்.

என்னுடைய மற்றொரு தோழியான ஜேனைச் சந்திக்கச் சென்ற போது ஏற்பட்ட ஒரு அனுபவம் சுவாரஸ்யமானது. பயணச் செலவுகளைப் பங்குபோட்டுக்கொண்டுசெல்வதுபோல அமைந்தடூர் அது. நான் அப்போது ஓர் மெக்சிகோ இலைஞனைச் சந்தித்தேன். அவன் ஒரு அமெரிக்கப் பெண்ணை அவள் ஒரு விலைமாது என்று தெரியாமலே திருமணம் புரிந்துகொண்டுவிட்டான். அவன் ஒருபாலினத்தவன். எனவே பாலுறவு விஷயத்தில் பிணக்கு ஏற்பட்டது. அந்தப் பெண் என்னிடம் வந்து தினமும் தான் படும் கஷ்டத்தைச் சொல்லிவிட்டு ஒரு நாள் நான் அவளுடன் செலவழிக்க முடியுமா என்று கேட்டாள். நானும் அவள் கணவனைப் போலத்தான் என்று பதிலளித்தேன். அவள் என்னைப் பார்த்து, "ஓ! சரி. பரவாயில்லை. பெண் சுகாதாரம் என்பது அத்தனை சிக்கலானதா?" என்று கேட்டு என்னைத் திகைப்பில் ஆழ்த்திவிட்டுப் போய்விட்டாள்!

நான் ஜேனைச் சந்தித்த போது அவள் கணவனுடன் மெக்சிகோவில் வாழ்ந்து வந்தாள். அவளுடைய நாவல், நாடகம், மற்றும் கட்டுரைத் தொகுப்புகள் விமர்சகர்களின் பாராட்டைப் பெற்றவை. ட்ரூமன் கேபோ, ஜான் ஆஷ்பெரி போன்ற தலைசிறந்த நாடக ஆசிரியர்களின் பாராட்டை அவளது நாடகம் பெற்றது.

## பிராங்க் மெர்லோ

மெர்லோ என்னுடைய மிகச் சிறந்த நண்பன். நான் அவனை முதலில் சந்தித்த போது அவன் பிரமிக்கத்தக்க அழகுடன், செதுக்கப்பட்ட சிலை போலக் காட்சியளித்தான். அவனுடன் பழகிய மாதிரி நான் வேறு யாருடனும் பழகியதில்லை. எங்கள் நட்பு பதினான்கு வருடங்கள் நீடித்தது - அவன் இறந்து போகும் வரை.

## பயணம்

என்னால் அமைதியாக ஓரிடத்தில் உட்கார்ந்திருக்க முடியாது. எனக்கு அதனால், பயணம் செய்வது மிகவும் பிடிக்கும். என்னிடம் ஏன் இப்படி எப்போதும் ஊர் சுற்றுகிறாய் என்று ஒருவர் கேட்டார். அதற்கு நான், "நகர்கின்ற பொருளைக் குறி வைத்து அடிப்பது ரொம்பக் கஷ்டம் அல்லவா? என்றேன்!

## போட்டி

நான் ஒநீலுடனோ மற்றவருடனோ என்னை ஒப்பிட்டுப் பார்த்துக்கொள்வதில்லை. என் வேலை தனித்த செயல். அது சிலரால் மட்டுமே தெரிந்துகொள்ளக் கூடிய ஒருவிதமான மறைபொருள் அடங்கியது. ஜோ ஆர்ட்டன் தவிர வேறு யாரும் இதைச் சாதித்ததில்லை. நான் ஜோ ஆர்ட்டனுடன் போட்டி போட மாட்டேன். நான் மிகவும் மதிக்கும் ஓர் படைப்பாளி ஜோ ஆர்ட்டன்.

## ஈகின் ஓநீல்

அல்பி அளவுக்கு ஓநீல் சிறந்த நாடக ஆசிரியர் அல்ல. அவர் லான் ஃபோர்ட் வில்சன் அளவுக்குக் கூட இல்லை. நான் ஒரு பட்டியலே தர முடியும். நான் ஓநீல் எழுத்தை ரசிக்கிறேன். அவரிடம் நிறைவான உத்வேகம் இருக்கிறது. நாடகம் பற்றிய சிறந்த பிரக்ஞையும் உடையவர். அவருடைய உத்வேகம்தான் என்னைக் கவர்ந்த விஷயம். அவருடைய 'பனிமனிதன் வருகிறான்' சரியான வரவேற்பைப் பெறவில்லை. முதலில் நான் அதை படித்த போது மிகவும் நீளமாக இருந்தது போலத் தோன்றியது. ஆனால், படித்த பின் அதன் நீளமும் அது வெளிக்கொணர்ந்த சிந்தனை வீச்சும் அந்த நாடகத்துக்குப் பலத்தை அளித்தன. இதை நான் அவருக்கு கடிதம் எழுதித் தெரிவித்தேன்.

அவர் எனக்கு எழுதிய பதிலில் தன்னுடைய நாடகம் முதல் நாள் அரங்கேறும் போது சொல்ல முடியாத மனஉளைச்சளைத் தரும் என்றும் எனது கடிதம் அவருக்கு உற்சாகத்தை அளித்தது என்றும் குறிப்பிட்டிருந்தார். வழக்கம் போல அவர் கடிதமும் என் கையைவிட்டுப் போய்விட்டது.

## மது

ஓநீலுக்கு மதுவினால் ஏற்பட்ட கஷ்டங்கள் பல. ஏன் பெரும்பாலான அமெரிக்கர்களுக்கும். எழுதுவதினால் ஏற்படும் அழுத்தத்திலிருந்து தப்பிக்க மதுவை நாடுகிறார்கள். ஒரு குறிப்பிட்ட வயது வரையிலும் இந்தப் பழக்கம் சரிதான். ஆனால், அதற்குப் பின் உடல் நலம் பற்றிய கவனம் அதிகம்




வர வேண்டும். நான் இப்போது குடிப்பதைக் குறைத்துக் கொண்டுவிட்டேன்.

### அரங்கேற்ற இரவுகள்

அந்தக் காலத்தில் நாடக அரங்கேற்ற தினத்தன்று முடடக் குடியல்தான். இப்போது எனக்கு கணைய அழற்சி என்று மிகக் குறைந்த அளவே குடிக்கிறேன். அத் தினங்களில் நான் குடித்துவிட்டு நிமிர்ந்த நெஞ்சைக் காட்டிக்கொண்டு அரங்குக்கு வருவேன். இல்லையென்றால் அரங்குக்கு அருகே உள்ள பாரில் குடித்துவிட்டு திரை போடும் சமயம் வந்து தலையைக் காட்டுவேன். இப்போது அரங்கேற்ற தினத்தை அமைதியாக எதிர்கொள்கிறேன். பொதுவாக முதல் நாள் நாடகம் சிறப்பாக அமையும். நான் உட்கார்ந்து அதை ரசிப்பேன். அதன் பின் வெளியே காத்திருக்கும் காரில் ஏறி விமான நிலையம் சென்று கே வெஸ்டுக்குப் போய்விடுவேன்.

### கே வெஸ்ட்

1941இல் முதல் தடவையாக அங்கு சென்ற போது அது மிகவும் எழில் பொங்கும் இடமாக - இப்போது இருப்பதை விட - என்னைக் கவர்ந்தது. என் வீடு மிகவும் பெரியது. அதில் நீச்சல் குளம், ஸ்டூடியோ, கப்பல்களில் உள்ளது போலத் துயிலிடங்கள், விசாலமான அறைகள், தோட்டத்தின் நடுவில் அழகிய கட்டிடம் என்று பிரமாதமான அமைப்போடு கட்டிய வீடு. என் வாழ்க்கைக்குத் தேவையான அனைத்து வசதிகளைக் கொண்டிருந்த வீடு.

### வேலை முறைகள்

கே வெஸ்டில் ஒரு நியதியைப் போல அதிகாலையில் எழுந்துவிடுவேன். நான் தனியே இருப்பதால் காலைக் காப்பி அருந்தியபடி அன்று செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றி அசை போடுவேன். வழக்கமாக இரண்டு மூன்று வேலைகள் பாதியில் நிற்கும். அதில் எதைத் தொடர்ந்து எழுதுவது என்று தீர்மானிப்பேன். பின் என் படிப்பறைக்குச் செல்வேன். அங்கு வழக்கமாகக் கொஞ்சம் ஒயின் இருக்கும். முதல் நாள் எழுதியவற்றை ஒரு முறை கவனமாகப் படிப்பேன். பின்னர் இரண்டொரு கிளாஸ் ஒயின் அருந்தி, என் தடபுடல் வாழ்க்கையை எண்ணி லேசாகப் பெருமைகொள்வேன். அதன் பின் எழுத்து, எழுத்து, எழுத்துதான்.

என் படைப்பு உணர்ச்சி வசப்பட்டு எழுதப்படும் சுயசரிதை போல் விரியும். ஆனால், அது என் நிஜ வாழ்க்கையின் உண்மைச் சம்பவங்களை உள்ளடக்கியிராது. ஆனால், என் உணர்ச்சிகளைச் சரியாக எதிரொலிக்கும். எழுதுவது தவிர எனக்கு வேறு அடைக்கலம் ஏதும் இல்லாததால் தினமும் எழுதுவேன். துக்கமான சூழல், சிதறுண்ட காதல், பிரியமானவர்கள் மரணம், அல்லது வாழ்க்கையில் நேரும் அசம்பாவிதம் ஆகியவை எதிர்ப்படும் போது எழுத்தின் உள்ளே சரணடைந்துவிடுவது என்னால் தவிர்க்க முடியாது. ஆனால், மன அழுத்தம் ஏற்படும் நாள்களில் எழுத்து கூட உதவிக்கு வராது. மெர்லோ இறந்த போது நான் உறைந்து போய்விட்டேன். தாங்க முடியாத அந்த அதிர்ச்சியின் காரணமாக என்னால் சில காலம் எழுத முடியாமல் போய்விட்டது. பின்னர் மருத்துவர் உதவியை நாடி என்னைச் சரி செய்துகொண்டேன். எழுதாமல் என்னால் வாழ்ந்து விட முடியுமா? ஒருக்காலும் முடியாது.

"ஒரு நாடக ஆசிரியனுக்கு உத்வேகம் கிடைத்தால் சிறிது காலத்துக்குள் அதை எழுதி விட முடியும்; ஆனால், ஒரு நாவலாசிரியர் தினமும் ஏழெட்டு மணி நேரம் வியர்வை சிந்த வேண்டும்" என்று நார்மன் மெய்லர் சொன்னதாகக் கேள்வி. ஆனால், நாடகங்கள் எழுதும் நான் சொல்வது என்னவென்றால் இங்கு ஒருவன் கடுமையாக உழைக்க வேண்டும். ஒரு நாடகக் கரு என்னில் தாக்கம் கொண்டால் அந்த வேலையை முடிக்கும் வரை நான் கடுமையாக உழைப்பேன். இனிமேல் செய்ய ஒன்றுமில்லை என்ற நிலை வரும் போதுதான் அந்த எழுத்தை நான் நிறுத்துவேன்.

(அடுத்த இதழில் தொடரும்)

# ஒரு குச்சி மிட்டாயும் இரண்டு கோபிகோ மிட்டாய்களும்



செவல்குளம் செல்வராசு

வண்டி விட்டு இறங்கி
இருவது நாளாச்சு...
நாலு நாள்ல கூப்டுறேன்னான்
குரங்கு மூஞ்சி மேனஜர்.
ஒரு வாரம் ஆனா நல்லதுனு
மனசுக்குள்ள சொல்லிக்கிட்டேன்.
கழுகுமலைக்கு பஸ் ஏறும்போதே
மனசெல்லாம் மணந்தா மல்லிகா.

நல்லாத்தான் போச்சு
பத்து பகல்பொழுதும்
பதினஞ்சு ராப்பொழுதும்.

போன வாரம்
பாப்பாவைக் கூப்பிட்டுட்டு
பழங்கோட்டை திருவிழாவுக்குப் போய்
துளசி மதினி வீட்டுல
கறிக் கொழம்பு சாப்பிட்டு,
பாசமாக் கொடுத்தாகன்னு
அவளுக்கும் வாங்கிட்டுவந்தேன்
தூக்கு வாளில.
அன்னைக்கு ஆரம்பிச்சது சடவு
அவளுக்கும் எனக்கும்.

அப்பனுக்கு சுகர் கட்டுப் போட
தர்மாஸ்பத்திரில ரெண்டு நாளும்
அந்தோணி வாத்தியார்
மருந்தக் குடிச்சப்ப
கலாராணி ஆஸ்பத்திரில
ரெண்டு ராத்திரியுமாக
கழிஞ்சுபோச்சு இருவது நாட்கள்.

கைக்காசும் கரைஞ்சுபோச்சு
கடனும் கொஞ்சம் வாங்கியாச்சு
கழுத கோவமும் பெருகிப்போச்சு
ராத்திரி கூட கசந்துபோச்சு
சடவு சண்டையாகி
ரெண்டு நாளாப் பேச்சில்ல.

"மைப்பாறை அண்ணாச்சிக்குப் பதிலு
வண்டி மாத்திவிட வரச்சொல்லி
போன் போட்டாரு புள்ள"
சண்டையெல்லாம் மறந்திட்டு
கிட்டவந்து கேட்டா
"எப்பவாம்"
"இன்னைக்கு மத்தியானம் ஒரு மணிக்கு
இப்பக் கிளம்புனாத்தான் சரியா இருக்கும்"
கட்டிப்பிடிச்சு முத்தம் குடுத்து
கண் கலங்கிச் சொன்னா
"சாரி (அ)த்தான்"

வெள்ளென தூத்துக்குடி போய்
கைலிய இறக்கிவிட்டு
"வணக்கம் சார்"னு நின்னேன்
ஆபிஸ் வாசல்ல.
"அடடா சொல்ல மறந்துட்டனேப்பா
ஏதோ லோடு மேன் பிரச்சனையாம்
லோடு நாளைக்குதான் ரெடியாகும்
நீ வேணா போயிட்டு நாளைக்கு வாரியா"
சமயம் பாத்துக் கழுத்தறுத்தான் மேனஜர்.

என்னக் கண்டாலே பிடிக்காது அவனுக்கு
போன தீவாளிக்கு
அவன் ஒன்னுவிட்ட மச்சானுக்கு
வண்டி மாத்தி விடச் சொன்னப்ப
மாட்டேன்னுட்டேன்.
அதுலருந்தே இப்படித்தான்.

இயலாமையும் ஆற்றாமையும் பொங்க
ஊருக்குப் பஸ் ஏறினேன்
பிள்ளையார் கோவில்ல இறங்கி
வீட்டப் பாத்து நடந்தேன்.
ஏங்கி நிக்கும் பாப்பா முகம்
நினவு வர...
மிச்சமிருந்த சில்லற குடுத்து
பாட்டயா கடையில வாங்குனேன்
'ஒரு குச்சி மிட்டாயும்
இரண்டு கோபிகோ மிட்டாய்களும்.'

செவல்குளம் செல்வராசு
<sevalkulamselvarasu@gmail.com>

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



₹ 110




₹ 80



₹ 120



₹ 60




₹ 100




₹ 100



₹ 750




₹ 100




₹ 150


**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 94440 70000, 044 2435 3555.
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com. இணையதளம்: www.amruthamagazine.com

# ச்சுவாமி

## ஆகாச மூர்த்தி

ஓவியம்: **கே. லக்ஷ்மா கவுட்**

புதுக்கிராமம் நிழற்குடையின் பயணிகள் உட்காருமிடத்தில், நடுவே சாலையைப் பார்க்கும்படி, சுண்ணாம்பு அடிக்கப்பட்ட கல் கோவர்த்தன மலையைப் போல அமர்த்தப்பட்டிருந்தது. அதைச் சுற்றி செவ்வந்திப் பூக்களும் செவ்வரளிப் பூக்களும் சிதறிக் கிடந்தன. நிழற்குடைக்கு முன்னால் ஒருஆள் உயரத்துக்கு மரத்தாலான கம்பம் நட்டப்பட்டு அதில் கண்ணாடிக் கூண்டு ஒன்று லாந்தரைப்போல கொக்கியில் மாட்டி தொங்கவிடப்பட்டிருந்தது. அதில் எப்போதும் எரியும்படியாக ஒரு கிளியாஞ்சட்டி தீபம். சுவரெங்கும் கோகுலத்தின் கண்ணன் லீலைகளும் கிருஷ்ண அவதாரங்களும் பிளக்ஸ் சித்திரங்களாக ஒட்டப்பட்டிருந்தது. நிழற்குடையின் இருபுறமும் செவ்வரளிச் செடிகளும் தங்க அரளிச் செடிகளும் பூத்துச் சொறிந்தன.

நிழற்குடையின் வலது ஓரமாக பாலாஜி பால் நிலையம் பெயர் தாங்கிய போர்டு மடித்து சாய்த்து வைக்கப்பட்டிருந்தது. அப்போதுதான் காலைநேர விநியோகம் முடிந்திருக்கும் போலிருந்தது. பாலின் வெண் துளிகள் தரையில் திட்டுத்திட்டாக படிந்திருந்தது. முன்னே விளக்கின் ஒளி, பால்மணம், வாசல் தெளித்திருந்த ஈரம், பூக்கள் உள்ளே ஒரு சுயம்புவாக அமர்ந்திருப்பது போன்ற ஓரடிக்குன்று எல்லாம் அவ்வழியே செல்பவர்கள் வணங்கிச் செல்லுமாறு கோவிலும் நந்தவனமும் பசுமடமும் ஒருங்கே காட்சியளிக்குமாறு அமைக்கப்பட்டிருந்தது.

நிழற்குடையின் வலப்பக்க இடைவெளி வழியாக ஒரு சிட்டுக்குருவி பறந்துவந்தது. பயணிகள் உட்காருமிடத்தில் தத்தித்தத்தி சலங்கை சத்தம்போல கத்திக் கொண்டே நடுவிலிருந்த பீடத்தின் மேல் அமர்ந்தது. பிறகு அங்கிருந்து சரேலென இடப்பக்கம் வழியாக வெளியேறிப் பறந்து பின்னால் பயன்படுத்தாமல் விடப்பட்ட பெண்கள் நகராட்சி பொதுக் கழிவறையின் மேலே இருக்கும் வேப்பமரக் கிளைகளுக்குள் மறைந்தது.வேம்பின் சிறுவெண் மூக்குத்திப் பூக்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. அந்த சில நொடிப்பொழுதில் ஒரு சிட்டுக்குருவி



காலம் சென்ற அஞ்சுகிராமத்தின் நடமாடும் அடையாளமாய் இருந்த சிவகாமியை ஆனந்தின் நினைவுக்குக் கொண்டு வந்து சேர்த்தது. சுமாராகப் பதினைந்து வருடங்கள் ஓடியிருக்கலாம்.

அப்போதிருந்த புதுக்கிராமத்தில் இப்போது போலல்லாமல் பிரதான சாலை குறுகியதாக இருந்தது. இந்தக் கழிவறை கவுன்சிலர் இசக்கியப்பனால் கட்டப்பட்டது. பெண்களின் சிரமத்தை முன்னிட்டே இந்தக் கழிப்பறை ஏற்பாடு. காலை பத்துமணி வரையும் இரவில் இரண்டுமணி நேரமும் மட்டுமே திறந்திருக்கும். தண்ணீரைக் குறைவாகப் பயன்படுத்துவதைக் கண்காணிக்க சிவகாமி நியமிக்கப்பட்டிருந்தாள்.

இரண்டாவது வடக்குத் தெருவின் கடைசியில் இருக்கும் இந்த நிழற்குடையில்தான் சிவகாமியை ஆனந் கடைசியாகப் பார்த்தது. அவளைச் சுற்றி ஈக்கள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. வெடுக்வெடுக்கென விரட்டிக் கொண்டிருந்தாள். இதே நிழற்குடையில்தான் தள்ளாட்டம் கூடிய அந்திம வேளைகளில் தலைமாட்டுக்கு அழுக்குத் துணி மூட்டையோடு நடுநாயகமாக அவள் அமர்ந்து கொண்டிருந்தாள்.அருவறுப்புபட்டுயாரும்அப்பக்கம் ஒதுங்குவதில்லை. பக்கத்தில் உடன்பிறப்பைப்போல சாய்ந்து நின்றுகொண்டிருந்தது அவளுடைய ஊன் கம்பு.

இலுப்பையூரணி பஞ்சாயத்துக்குச் செல்லும் இந்தச் சாலையின் வடக்குத் தெற்காகப் பிரியும் ஐந்தைந்து தெருக்கள் பிரியும்படி அமைந்திருக்கிறது புதுக்கிராமம். முன்னர் ஓரிரு அரசுப் பேருந்துகள் புதுக் கிராமத்துக்கு வந்துகொண்டிருந்தது. இப்போது சிற்றூந்தின் வருகையால் எங்கு வேண்டுமானாலும் நிறுத்தி பயணிகளை ஏற்றிக்கொள்ளும் நிலையில் இந்த நிழற்குடை அவசியமற்றுப் போனது.

இசக்கியப்பன், ராஜசேகருக்குத்

தாய்மாமா முறை வேண்டும். நகர ரஜினி ரசிகர்மன்றத் தலைவர் பதவியிலிருந்து நகராட்சி சேர்மன் ஆகவேண்டுமென்பது அவனது தணியாத விருப்பம். ஆனால், தனது தலைவரே 'நாளைய முதல்வர்' கனவை தனது திரைப்படம் வெளிவரும்போது மட்டும் அறிவிப்பு செய்துவிட்டு படம் வெள்ளிவிழா கண்டபிறகு கைவிடுவார் என்ற தந்திரம் ராஜசேகரனுக்கு தாமதமாகவே புரியவந்தது. அதனால், அவன் எடுத்த புதிய அவதாரம் ராஷ்டிரிய ஆத்ம சபா இயக்கத்தில் சேர்ந்தது. அதன் ஒரு கட்டமாக அவன் சார்ந்த இயக்கத்தினரால் புதுக்கிராமத்தில் வரிசையாக நடப்பட்டதே இந்த மரங்கள். அதிகார பலத்தைக் கொண்டு பாலாஜி பால் நிலையத்தை நடத்திக் கொண்டிருந்தது ராஜசேகரனின் ஒன்றுவிட்ட அண்ணன் ஒருவர்.

சிவகாமியின் ஓயாத சந்தடி ஒவ்வொரு தெருக்களிலும் கடவுகளிலும் கேட்டபடிதான் புதுக்கிராம வாசிகளின் அன்றாடம் கழிந்து கொண்டிருந்தது. சலங்கை கட்டாத குறைதான். சலங்கை சத்தம் அவளது தொண்டையிலிருந்து வெளிப்பட்டது. இடுப்பில் ஒரு குழந்தையைப்போல அலுமினியச் சட்டியைத் தூக்கிக்கொண்டு வருவாள். அவள் எதிர்ப்பட்டால் அன்றைய காரியம் தடையில்லாமல் நடக்கும் என்பது எல்லோருடைய நம்பிக்கை. யாராவது வம்பிக்கிழுத்தால், "ஆமா உங்களுக்குக் காணாமக் கெடக்காக்கும் மாமனே மச்சானே" என்று பதிலளிப்பாள். அவர்களே அளவுக்கு மீறிகிண்டலடித்தால் கெட்டகெட்ட வார்த்தைகளால் மூன்று நான்கு தலைமுறையையும் முன்னே நிறுத்தி வெளுத்து வாங்குவாள். சரி, வந்த காரியம் நிறைவேறியது என்று ஏதோ ஆசீர்வதிக்கப்பட்ட வார்த்தைகளாக எடுத்துக்கொண்டு நகர்ந்து விடுவார்கள்.

அன்று ஆனந்த் வீட்டு காம்பவுண்டுக்கு முன்னேயிருந்த வேலுமணிப் பிள்ளை வீட்டு முற்றத்தில் காலைநீட்டி அமர்ந்து அலுமினியச் சட்டியிலிருந்த பழைய சோற்றை கைநிறைய அள்ளி அண்ணாந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தாள் சிவகாமி. அவளைச் சுற்றி சிதறிய பருக்கைகள். சிறிய தட்டிலிருந்த மோர் மிளகாயை எடுத்துக் கடித்து மற்றொரு கவளம் சோற்றை வாயில் வைத்தாள். சற்றுநேரம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஆனந்தும் அவனது சேக்காலி பாலமுருகனும் கைவரிசையைக் காட்டத் தொடங்கினார்கள்.

பக்கத்திலிருந்த செடியை உடைத்து முதுகு சொறிந்து கொண்டிருந்தாள் சிவகாமி. இதுதான் சமயமென்று மெதுவாகப்போய் சோற்றுச் சட்டியைத் தூக்கி ஓடப்போக சிவகாமி திரும்பிப் பார்த்து ஒரே அவயக்காடு. "ஏ... கொள்ளேல போறவங்களா... தேவிடியா கூதி மவங்களா... ஒத்தலக்கா... தூ... நாய்ங்களா..." என்று அடித்தொண்டையிலிருந்து காறி சாக்கடையில் எச்சிலைத் துப்ப, வீட்டிற்குள்ளிருந்த சீனியாபிள்ளை மனைவி எட்டிப் பார்த்தாள்.

காம்பவுண்டிலிருந்த சீனியாபிள்ளை வெளியேவர சிவகாமியிடம் பாலமுருகன் சட்டியைக் கொடுத்துவிட்டுப் பறந்துவிட்டான். அவரிடம், "பாருங்கத்தான் இந்தக் கோட்டிக்காரப் பயவுள்ளைகள..." காலை உதைத்து உதட்டைப் பிதுக்கினாள். புறங்கையால் பருக்கைகள் சிதற கண்ணைக் கசக்கி அழத் தொடங்கினாள்.

ஆனந்த்தான் அவர் பிடியில் மாட்டிக்கொண்டான். "இந்தா கேக்கம் பிள்ள நீ அழுவாத..." என்று அவளைச் சமாதானப்படுத்திக் கொண்டே காதைத் திருகி, "போயி ஒழுங்கப் படிக்கிற வேலயப் பாருங்கல... அவ கருநாக்குக்காரி திட்டுனா பலிச்சிரும் பாத்துக்க" என்றார்.

சிவந்த காதைத் தடவிக்கொண்டே வீட்டுக்குப் போனவன் இரண்டு மூன்று நாட்கள் உள்ளுக்குள் பயந்து கொண்டிருந்தான். இரவில் தூக்கம் வரமால் புரண்டு கொண்டிருந்தான் 'எங்கே ச்சுவாமி சாபம் பலித்துவிடுமோ' என்று.

அப்போது பார்த்த சிவகாமியின் தோற்றமும் வயதும்தான் இப்போதும் நினைவில் நிற்கிறது. பரட்டைத் தலையோடு சுற்றுபவள் என்றாலும் அவளது குள்ளமான மெலிந்த உடலுக்கும் வட்ட முகத்திற்கும் பொருத்தமாக கீரிடம்போல சுருள்சுருளாக நரைமுடிகளோடு பார்க்க வசீகரமாக இருப்பாள். முப்பதுக்கும் நாற்பதுக்கும் இடையில் அவள் வயது. சேலையைப் பாதியாகக் கிழித்து கட்டாகத் தாவணிபோல உடுத்துவதுதான் அவள் வழக்கம். மேலுதட்டின் மேல் இடது ஓரத்திலிருந்த கருத்த மரு. அதில் கருப்பு ஒன்றும் வெள்ளை ஒன்றுமாய் வளைந்து சுருண்ட மயிர் பூனையின் மீசைபோலத் தோற்றம் காட்டும். யாரையாவது வசைபாடும்போது அந்த மீசையும் உடன் இசையும்.

அவள் தலைமுடியைச் சிலாகிக்கும் பெண்கள், "இந்திராகாந்தியம்மா கிராப் முடி மாதிரில்லா இருக்கு" என்பார்கள் பொறாமையோடு. தலையை அடிக்கடிச் சொறிந்து கொள்வாள். பெரும்பாலும் வேலையில்லாத நேரங்களில் புதுக்கிராமம் மெயின் ரோட்டுக்கு மேலேயே ஒரு ஓரத்தில் கட்டப்பட்ட, முத்துமாரியம்மன் கோவிலுக்கு முன்னே வேயப்பட்ட கூரைச் சாய்ப்புக்கு கீழே, மண்தரையில் ஓய்வெடுப்பாள். அரிப்பெடுக்கும் தலையிலிருந்து ஈரையும் பேனையும் உருவி இடது கட்டைவிரல் நகத்தில்வைத்து வலது கட்டைவிரலால் அழுத்தி அது வெடிக்கும் சத்தத்தில், "உஷ்... உஷ்..." என்று முனங்குவாள். குழந்தைகள் தும்முகையில் தாய்மார்கள் செல்லமாக ஆயுளைக் கூட்டச் சொல்வதுபோல, "நூறு... எரநூறு..." என்பாள்.

இரவில் அதே முத்துமாரியம்மன் கோவிலில் கூரைச் சாய்ப்புக்குள் தங்கல். அம்மனுக்கு முன்பு குண்டு பல்ப் எறிய உள்ளே சிவப்பு வண்ண விளக்கெரிய கண்களில் ஒட்டிய வெள்ளித்தகடும் உருவமும் உக்கிரமாக இருக்கும். எப்போதாவது குடும்பத்தோடு வெளியூர் சென்று நடு ராத்திரியில் திரும்பும்போது ஆனந்த் அப்பக்கமே பார்வையைத் திருப்பாமால் நடப்பான். 'இந்த ச்சுவாமிக்கு மட்டும் எப்படி கொஞ்சம்கூட பயமே இல்லை' என்று யோசிப்பான்.

சிவகாமி, அஞ்சுகிராமத்தில் தொண்டூழியம் செய்யாதே வீடுகளே இல்லை எனலாம். நெல் உமியின் சாம்பல் எடுத்து வருவதற்காக திட்டங்குளம் செல்லும் செம்மண் பரப்பான பாதையில் இருக்கும் கண்மாய்க்கரை வழியாக இரண்டுமைல் தூரம் ஈரக் காற்றை சுவாசித்தபடி நடந்தே செல்வாள்.

சாம்பல் வாங்க ஒரு கூட்டமே மொய்க்கும். அவர்களுக்கெல்லாம் முன்னேயே முதல் ஆளாகச்சென்று வரிசையில் நின்றுகொள்வாள். வெள்ளைக் கோணிப்பை நிறைய உமிச் சாம்பலை வாங்கி நிறைப்பாள். அங்கிருந்து தலைச்சுமையாகவே வீட்டுக்குக் கொண்டுவந்து போடுவாள். ஆனந்தின் அம்மா நான்கு ரூபாய் கொடுப்பாள். இரண்டு ரூபாய் சாம்பலுக்கு இரண்டு ரூபாய் சுமைக்கூலிக்கு. அதற்குமேல் யாராவது பரிதாபப்பட்டுக் கொடுத்தாலும் வாங்கமாட்டாள். பதிலாக அவளது அலுமினியக் குண்டாஞ் சட்டியில் பழைய சோறும் ஊறுகாயோ சுண்டவைத்த முந்தையநாள் குழம்போ கேட்டு வாங்கிக்கொள்வாள். அவள் கொண்டுவந்து போட்ட சாம்பல் பல்துலக்கவும் பாத்திரம் விளக்கவும் ஒரு மாதத்திற்கு வரும்.

புதுக்கிராமத்தில் எந்த விசேச வீடுகள் என்றாலும் அங்கும் சிவகாமி முதல்ஆளாக இருப்பாள். திருமணத்திற்கு நாள் குறித்த கையோடு வாய்வழி யிலான முதல்அழைப்பு சிவகாமிக்குத்தான். ஆனால், அந்த இல்லத்துப் பிள்ளைமார் சமுதாயக் கல்யாண மண்டபத்தில் சிவகாமிக்குக் கடைசி விருந்துதான்.

அன்று விருந்து தடபுடலாய் இருந்தது. அவளிடம் யாரும் போட்டிபோட முடியாது. வாடிக்கையாக அதே தண்ணீர் டேங்க் பக்கத்தில் அமர்ந்திருந்தாள். அவளுக்கு முன்னே தூக்குவாளிகளில் மிச்சமான உணவு, பதார்த்தங்கள். அவளே தன் பெரிய இலையில் எடுத்துவைத்து நெஞ்சுவரை வஞ் சகமில்லாமல் சாப்பிட்டு முடித்தாள். அவளுக்கு முன்னே குவிந்துகிடக்கும் அத்தனை அண்டா குண்டா சட்டி பாத்திரங்களை ஒவ்வொன்றாக எடுத்துத்தண்ணீர் குழாயடிக்குக்கொண்டுசென்றாள். அப்போது அவள் சற்று நிமிர்ந்து விட்ட சத்தமான ஏப்பத்தில் தலைக்கு மேலேயிருந்த சமையல்கூட ஓட்டுச்சாய்ப்புக்குள்ளிருந்துசிட்டுக்குருவிகள் பயந்து அவளைத் திட்டிக்கொண்டே வெளியே பறந்தது. பக்கத்தில் உணவருந்திவிட்டு இளைப்பாறிய நாய் திடுக்கிட்டுப் பார்த்து மீண்டும் தலையைச் சாய்த்தது.

சாப்பிட்டு விட்டு வெளியேறிய ஒருவர், "பெரியப்பா பாத்தியளா ச்சுவாமி எப்படி ஏப்பம் விடுதான்னு" என்று கேட்க பக்கத்தில் இருந்தவர் சமுதாய சங்கத் தலைவர் சுப்பையாபிள்ளை. மூக்குப்பொடி போட்டவர் கையைச் சைகை காட்டி நிறுத்திதோளில்போட்டிருந்த வெள்ளைத்துண்டால் துடைத்துக் கொண்டார். ஹச்... ஹச்... ஹசென்று உடலதிரத் தும்மியவர் கமறலான மொழியில், "அவ சித்து உடம்புக்காரில்லா... சோறுகண்ட இடம் சொர்க்கம்னு திரியுதா... என்னைக்காவது கேள்விப்பட்டிருக்கியாலே... சீக்கு வந்து ச்சுவாமி எங்கனயாவது விழுந்து கெடந்தானு..." நடந்துகொண்டே மெதுவாகக் காதோரமாய்ச் சொன்னார்.

புதுக்கிராம வாசிகள் ஒட்டுமொத்தமாக பேச்சுவழக்கில் 'ச்சுவாமி' என்று அழைப்பதே வழக்கம். புதுக்கிராமத்தின் முடிவில் இலுப்பையூரணி தொடங்கும் எல்லையில் கணேசா தியேட்டர் இருந்தது. சிவகாமி அடிக்கடி பொழுதைக் கழிக்கும் இடங்களில் அதுவும் ஒன்று. கணேச தியேட்டர் முதலாளிக்கு ஒரு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. அந்த சோவிற்கான முதல் டிக்கெட்டை சிவகாமிக்குக் கொடுத்தால் கூட்டம் அள்ளுமென்று. கவுண்டரில் எங்கே நின்றாலும் அவளுக்கு அந்தச் சலுகை உண்டு என்றாலும் எல்லோருக்கும் முன்னதாகவே பெண்கள் கவுண்டரில் காத்துக் கிடப்பாள். புதுப்படங்கள் வெளிவந்து இரண்டு மூன்று மாதம்கழித்து இரண்டாவது ரிலீசாக கணேசா தியேட்டருக்கு வந்துவிடும். அப்போது தீப்பெட்டி ஆபிசுக்கு வேலைக்குச் செல்லும் பெண்களால் சனிக்கிழமை மாலையும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் நிரம்பி வழியும்.

அன்று அவள் வைத்திருக்கும் கம்பின்மேல் குமரிப் பெண்களுக்கு ஒரு கண். சிவகாமிக்குத் தெரியாமல் அதையெடுத்து ஒளித்து வைத்துவிட்டார்கள். சுற்றும் முற்றும் தேடிச்சலித்தவள், "எவடி எடுத்தது தட்டுவானிகளா... கட்டப்போற புருஷங்கிட்ட வாங்கிச்... சொருகிக்கிட வேண்டியதுதான குமருகளா..." நீசத்தனமாக இன்னும் எத்தனையோ கெட்ட வார்த்தைகளால் வெங்கலத்தொண்டையால் அர்ச்சனை செய்தாள் சிவகாமி. பிறகு அவளுக்கே தெரியாமல் பின்னாலிருந்து ஒருத்தி அவள் பக்கமாக கம்பை மீண்டும் வைத்துவிட்டு நகர்ந்துவிட்டாள். குமரிகள் எல்லாம் வாயைப் பொத்திச் சிரித்துக் களித்தார்கள்.

இரவுக் காட்சிகள் நடக்கும்போது, இடைவேளைகளில் அசோகமர வரிசைகள் ஒன்றின்

மறைவில் கம்போடு இருட்டில் நின்றுகொள்வாள். பெண்கள் சிறுநீர் கழிக்க அமரும்போது சிவகாமியின் கம்பு பதம் பார்க்க ஓங்கும். சில சமயங்களில் போலீஸ்காரன் லத்தியைப்போல அடியும் விழும். "போங்கடி உள்ள தூமையக் குடிக்கி... கக்கூசு எதுக்கு இருக்கு" தியேட்டருக்கு உரிமைக்காரி போல அதிகாரமாய்க் கத்துவாள். இந்தப்படி உபகாரங்களால் தியேட்டர் முதலாளி வள்ளிநாயகம், சிவகாமியை கூப்பிட்டு தீபாவளிக்கு தீபாவளி சேலைத் துணிமணி எடுத்துக் கொடுப்பதை வாடிக்கையாகக் கொண்டிருந்தார்.

கவுன்சிலர் இசக்கியப்பனைப் போலவே சிவகாமியை ஆதரித்து வந்தவர் அவரது ஒன்றுவிட்ட அண்ணனான பரமசிவம் பிள்ளை. கோவில்பட்டி பேருந்து நிலையத்தின் எதிரிலிருக்கும் ஆனந்தபவன் ஹோட்டலில் சர்வர் வேலை பார்த்துவந்தார். தனக்குப் பெண் பார்த்துக்கொண்டிருந்த காலத்தில் ஜாதகம் பார்த்ததில் முதல்தாரம் சீக்கிரத்திலேயே இறந்துவிடுவாள் என்று கணிக்கப்பட்டிருந்தது. அதற்குப் பரிகாரமாக புத்தி சரியில்லாத சிவகாமியின் கழுத்தில் தாலியைக் கட்டலாமென்று உறவினர்கள் ஆலோசனை சொல்ல அப்படியே நடந்தது. பரமசிவம் பிள்ளைக்கு முறைதான் வேண்டும் சிவகாமி. திருமணம் முடிந்து இரண்டுமாதம் இரவில் வெளியே தலைகாட்டது பகலில்மட்டும் உலவிக் கொண்டிருந்தாள். பிறகு எதிர்பார்த்ததுபோல் வானமே கூரையென வழக்கம்போல் அஞ்சுகிராமத் தெருக்களில் சுதந்திரப் பறவையாகத் திரியத் தொடங்கினாள்.

ஒருநாள் முத்துமாரியம்மன் கோவிலில் வைத்து வாந்தியெடுத்துக் கொண்டிருந்தாள். வேலைமுடித்து சாயங்கால வேளையில் சைக்கிளில் வீடு திரும்பிக் கொண்டிருந்த பரமசிவம் பிள்ளை சற்று குழம்பியபடியே வீட்டுக்கு சென்றுகொண்டிருந்தார். உடை மாற்றிக்கொண்டு வந்தவர் சிவகாமியிடம் நலம் விசாரித்து வற்புறுத்தி தன் சைக்கிளின் பின்னே அமரவைத்துதனியார் மருத்துவமனைக்கு அழைத்துப் போனார். பரிசோதனையில் சிவகாமி மூன்றுமாத கர்ப்பிணி என்று தெரிந்தது. அப்போதே டாக்டரிடம் பேசி பணத்தைச் செலவழித்துக் கருக்கலைப்பு செய்துவிட்டார். இந்த விசயம் குறித்து சிவகாமிக்குத் தரப்பட்ட விளக்கம் அவள் வயிற்றில் பிள்ளை தங்கவில்லை.

இதற்கிடையில் உடனடியாக இரண்டாவது ஒரு பெண்ணை பரமசிவம் பிள்ளை திருமணம் முடித்திருந்தார். அவர் ஏறியிறங்காத கோயில் குளமில்லை. காலப்போக்கில் சிவகாமிக்குச் செய்த பாவமோ என்னமோ தனக்குக் குழந்தை பாக்கியம் இல்லாது போனதென்று குற்றவுணர்வில் மனதிற்குள் புலம்பிக் கொண்டிருந்தார். அதிலிருந்து விடுபடவே ஒவ்வொரு நாளும் வேலை முடிந்து வீட்டுக்குவரும்போது புரோட்டாவோ தோசையோ பார்சல் கட்டிவருவார். சிவகாமி ஒரு இடத்திலும் தங்க மாட்டாதவள். நேரில் தென்பட்டால் அந்தப் பார்சலைக் கொடுப்பார். இல்லையென்றால் வீட்டிற்குக் கொண்டுசெல்வார்.

புதுக்கிராம வாசிகள் தங்கள் பிள்ளைகளுக்குச் சோறூட்டும்போது அடம்பிடித்தால் அங்கு சிவகாமி சொல்லிவைத்தாற்போல் தோன்றி விடுவாள். ஒருநாள் இரண்டாவது வடக்குத் தெருவில் வந்துகொண்டிருந்தாள். "நல்லவேள வந்த...ஏ... ச்சுவாமி இங்கவா.... ஒரு லெக்கில இருக்க மாட்டேங்கிறாங். அழுது அடம்பிடிக்காங். கொஞ்சம் என்னனு கேளு" என்றாள் மடியில் வைத்திருந்த தன் மகனுடன் ஆனந்தின் பெரியம்மா மகள் அமுதாக்கா.

"இந்தா வாரேன்..." உடனே அருகில் வந்து இடுப்பில் வைத்திருந்த அலுமினியக் குண்டானை அமுதா பக்கமாக நடைப்படியின் ஓரமாக வைத்தாள். ஆட்காட்டி விரலை குழந்தையின் முகத்திற்கு நேராக நீட்டி, "இந்தரு... என்ன கள்ளமுவ... ஒழுங்க சாப்பிடுதியா இல்ல பூச்சாண்டிகிட்ட புடிச்சுக் கொடுக்கவா..." என்று மிரட்டினாள். முகத்தை வலதும் இடதும் திருப்பிக் கொண்டு அமுதாவை மீண்டும் பையன் சோதிக்க சிவகாமி, "அடிங்கொப்ப மவனே" நாக்கைத் துருத்தி, "இந்தாரு இப்ப நீ திங்கலனே சாக்குல கட்டித் தூக்கிட்டுப் போயி கிணத்துல போட்டுருவே..." இரண்டு கையை விரித்து ஒரு ஆட்டம் போட்டதும் கண்ணீர் பொங்கும் முகத்தை அமைதியாக்கி சாப்பிடத் தொடங்கினான்.

ஆனந்துக்கு சரியாக நினைவில் இல்லை. ஒரு இரவில் முத்துமாரியம்மன் கோவிலுக்கு முன்புதான் அவள் காலமானாள். அப்போதுதான் கூரையை மாற்றி விழா கமிட்டியார்கள் புதிதாக சென்டிரிங், தளமெல்லாம் போட்டு புதுப்பித்திருந்தார்கள். அதுமுதல் சிவகாமியை, "சுத்தமா இருந்தா இரு இல்லனா அழுக்குமூட்டையத் தூக்கிட்டு வேற இடம் பாரு... இப்பத்தான் கூட்டம் அதிகமா வர ஆரம்பிச்சிருக்கு... எம் பொழப்புல மண்ணள்ளி போட்டிராத... புருஞ்சிதா" என்று கரிசல்குளத்திலிருந்து வந்த புதுப்பூசாரி அதட்டிக் கொண்டிருந்தான். பதிலுக்குப் பதில் வாயாடும் சிவகாமி நோய்மையால் மௌனித்திருந்தாள்.

அருகில் யாருமற்ற இரவின் வெறுமை. பழைய டியூப் லைட்டுகள் மாற்றப்பட்டு புதிதாக சோடியம் விளக்குகள் பொருத்தபட்டிருந்தது. அவள் அந்த விளக்குக்கம்பங்களையே பார்த்துக்கொண்டிருந்தாள். கண்கள் கூசியது. பொங்கிய பீழையைத் துடைத்துக் கொண்டாள். தனது உடல்வலியும் மனவலியும் என்னவென்று விளங்காமல் கண்ணீர் வடித்தாள். தனது உறவுப் பட்டாளங்களின் அமர்க்களங்கள் பெருகிய புதுக்கிராமமெயின் ரோட்டை வெறித்தாள். வலதுபக்கம் திரும்பி நிமிர்ந்து உட்கார்ந்து அம்மனை



வணங்கி, "சும்மா இரியேன் வெளையாடுனது போதும்..." என்று மிரட்டுவதுபோல கம்பை ஓங்கிக் கத்தினாள். அதே பழைய சிவகாமியின் உச்ச கோபம். இரத்த அழுத்தம் கூடிப்போய் மயங்கி கண்ணை மூடி விழிக்க முடியாமல் விழித்தாள். எதிரே அவளைச் சுற்றி காலன் அனுப்பிய ஆவிகள்.

கண்ணுக்குத் தெரிய அவற்றொடு போராடிக் கொண்டிருந்தவள் சிவகாமியாகத்தான் இருக்க முடியும். தடுமாறி எழுந்தவள் சட்டென விசைகொண்டு கம்பைச் சுழற்றினாள். பொந்துக் கண்களும் கபால மண்டைகளோடும் சுழன்று வளைந்துவந்த பத்தடி உயர பொய்க்கால் ஆவிகள். "ஊஊ...ஏய்... சூசூரு..." விலகி விலகி தாக்க வந்தன. ஆடிமாதச் சாமக் கொடைக்கு ஆடும் சாமியாட்டமாய் அம்மன் முன்னே ஆக்ரோசமாய் நாக்கைத் துருத்தி ஆடிக் கொண்டிருந்தாள். அடிவாங்கிய மண்டையோடுகள் கீழே உருண்டு மீண்டும் போக்கு காட்டும் ஆவிகளின் கழுத்தில் பொருந்திக் கொண்டன. ஒருசொல் கழுத்தை நெரித்துக் கொல்லவும் ஒருசொல் கண்ணீர் ததும்ப செல்லமாகவும் "ச்சுவாமி... ச்சுவாமி..." என்று கிணற்றுக்குள்ளிருந்து எழுந்து வந்ததுபோல கரகரத்த குரலில் கத்தின. கெஞ்சின. அவளுக்கு நெற்றியில் திருநீறிட்டு மலையிறக்க யாரும் அங்கில்லை. சுழன்று ஆடிய ஆட்டத்தில் சீலைத் தாவணி எங்கோ தரையில் விசிறப்பட்டிருந்தது. பட்டனில்லாத கிழிந்த மேல்சட்டை காற்றில் அலைய... வற்றிய முலைகள் நெஞ்சுக் கூட்டில் விம்மிவிம்மித் தணிந்தன. யாரோ அசைத்துக்கொண்டிருந்ததுபோல கோயில் மணியின் ஓசை. அவளைச் சுற்றி ஓசையெழுப்பிக் கொண்டே அவள் தலையைப் பதம்பார்த்தது. "எம்மா..." வென்று கிறங்கி அம்மனின் முன்னே நெடுஞ்சாண் கிடையாய் விழுந்தாள்.

கவுன்சிலர் இசக்கியப்பன்தான் அவர்கள் சமூகத்திற்குப் பாத்தியப்பட்ட ரதத்தைக் கொண்டுவந்து நிறுத்தினார். புதுக்கிராமத்தின் எல்லா வீடுகளிலும் சாதிவித்தியாசம் பார்க்காமல் இறந்தவருக்கான ஈமைக் கடன்களை முன்னின்று செய்வார். மற்றசாதியினர் என்றால் அச்சமூகத்தினரின் சவ வண்டியை வரவழைத்து சகல இறுதி மரியாதைகளைக்கும் அதற்குரிய ஆட்களை ஏவி செய்து முடிப்பார்.

கூட்டமான கூட்டம் அவள் இறுதி ஊர்வலத்தில் பங்கேற்றது. வாழ்நாளில் தன் தலையில் பூவே சூடிக் கொள்ளாதவள் சிவகாமி. அஞ்சுகிராம மெயின் சாலையெங்கும் சாமந்திகளும் செவ்வந்திகளும் கனகாம்பர கதம்ப மாலைகளும் அவளுக்கு முன்னே சிதறப்பட்டன. இலுப்பையூரணி கண்மாய்க்கரை ஓரமாய் இருந்த சுடுகாட்டுக்கு உள்ளே கொண்டு செல்லுமுன்பு ஆயிரம் வாலா சரவெடியை சமுதாய இளைஞர்கள் வெடிக்கவைத்துக் கொண்டாடினார்கள்.

புதுக்கிராமத்தில் அவள் மறைந்த பிறகும்கூட கொஞ்சகாலம் சிவகாமிதான் சோறூட்டினாள். “சாப்பிடு இல்லாட்டி ச்சுவாமிக்கிட்ட பிடிச்சுக் கொடுத்துருவேன்” என்று தன் பிள்ளையை அதட்டி சோறூட்டிக் கொண்டிருந்தாள் ஒன்னாவது தெற்குத்தெருவின் புகுந்தவீட்டுக்கு வந்த மருமகள் ஒருத்தி.

இப்போதிருக்கும் புதுக்கிராமம் என்னவோ அந்நியமாகவே பட்டது ஆனந்துக்கு. அப்போது பெண்களுக்கு வருவாயை ஈட்டித்தந்த சிறிய தீப்பட்டித் தொழிற்சாலைகளும் குறைந்துவிட்டன. எல்லாமே இயந்திரத்தால் உற்பத்தி செய்யப்படுவதால் வேலையாட்கள் குறைக்கப்பட்டனர். வீடுவீட்டுக்கு சேட்டிலைட் சேனல். கணேசா தியேட்டரும் மூடப்பட்டது. இப்போது திப்பெட்டித் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய மூலப்பொருளான தீப்பெட்டிக் குச்சிகளை உற்பத்தி செய்துகொண்டிருக்கிறது. புதுக்கிராமத்தில் இருந்த ஒரு பஞ்சு ஆலையும் கூட அதிநவீன இயந்திரங்களை இறக்குமதி செய்து ஆட்குறைப்பு செய்தது. அதனால் நிறைய ஆண்களும்கூட வெளியூர்களுக்கு வேலை நிமித்தமாக செல்ல வேண்டியவர்களாயினர். ஆனந்தும்கூட அரபு நாட்டில் ஒருவருடம் ஆறுமாதம் என்று ஒப்பந்த மெக்கானிக்காக பணிபுரியும் ஒரு இடப்பெயர்வு வாசிதான்.

அத்துவான மதியவேளையில் புதுக் கிராமத்தின் மெயின் ரோட்டில் நடக்கும்போது தனிமையும் பொருளாயாத ஓட்டமும் அழுத்தும் வாழ்க்கையில் சிவகாமியை பற்றிய நினைவுகள் ஆனந்துக்கு எப்போதாவது இப்படி வந்துபோவதுண்டு. இக்காலத்தில் அடிக்கும் வெயிலும் மழையும் வேறுதான். அப்போதிருந்த ச்சுவாமியின் மேல் படிந்திருந்த புழுதியின் வாசம் வேறுதான். ஆனந்த் ஒருமுறை அம்மா சொன்ன சேதியை நினைத்துப் பார்த்தான். “பரமசிவம் பிள்ளை ச்சுவாமிக்கு கருக்கலைப்பு செஞ்சுட்டு வந்த அன்னைக்கு சாயங் காலம்தான் நீ பொறந்தே”.

ஆகாச மூர்த்தி
<aakaasamuthup@gmail.com>

Form IV

Statement about ownership and other particulars about newspaper 'AMRUDHA' as required to be published under section 19-D subsection (b) of the Press andRegistration of Books Act read with Rule 8 of the Registration of Newspapers (Central Rules) 1956

| | | |
|---|---|---|
| 1 | Place of publication | CHENNAI |
| 2 | Periodicity of the publication | Monthly |
| 3 | Printer's name | A.Chandran, Ayyanar Offset. 10 Subba RaoNagar, Choolaimedu, Chennai-94 |
| 4 | Publisher's name, nationality and address | G.Thilakavathi<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |
| 5 | Editor's name, nationality and address | Dr Prabhu Thilaak<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or share holders, holding more than one percent of the total capital | G.Thilakavathi; Dr Prabhu Thilaak; Ms Shruthi Thilaak- Directors- White Lotus Books Pvt. Ltd<br>Indian<br>5, Fifth street, Somasundaram Avenue, Sakthi Nagar, Porur, Chennai-116 |

I, G.Thilakavathi hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief

Date : 11.02.2023 Signature of publisher

# ஒரு மரணமும் ஒரு விருதும்

**விட்டல்ராவ்**

சென்னை தொலைப்பேசியில் என் பணிக் காலத்தில் மறக்கமுடியாத இரு லைன்மேன் தோழர்கள் ரவிக்கண்ணனும் சடகோபனும்.

ரவிக்கண்ணன், சுண்ணாம்பு கொளத்தூர் எனும் கிராமத்திலிருந்து வந்து போனவர். கீழ்க் கட்டளையையடுத்த நன்மங்கலம் அடுத்து உள்ளூருக்கு சென்றால் சுண்ணாம்பு கொளத்தூர். இவ்வூரை சுருக்கமாக எஸ்.கொளத்தூர் என குறிப்பிடுவர். இந்த எஸ்.கொளத்தூருக்கு காலையிலும் மாலையிலும் இரண்டு தடவை ஒரு மணி நேர இடைவெளி விட்டு பஸ் போக்குவரத்து நடைபெற்று வந்தது. மற்றபடி அவ்வூரர் சைக்கிள் நடையென்று இருந்த காலம்.

ரவிக்கண்ணன் பி.யு.சி வரை படித்தவர். மெக்கானிக் போட்டித் தேர்வு எழுதி, தேர்ச்சியும் பெற்றிருந்த நிலையில் பயிற்சிக்கான உத்தரவை எதிர்பார்த்து காத்திருந்தார்.

லைன்மேன் எனும் தொழிலாளிகள் மின்வாரியம், தொலைப்பேசித் துறை, தந்திப் பிரிவு என்ற அரசு நிறுவனங்களில் பணிபுரிந்தவர்கள். தொலைப்பேசி லைன்மேனுக்கும் தந்தி லைன் மேனுக்கும் தூர உறவுண்டு. தொலைப்பேசியென்பது Land Line எனும் ஒரே இடத்தில் அமைந்த Fixed Telephones இயங்கி வந்த காலத்தில் இருந்த லைன்மேன்கள் மிக மிக அத்தியாவசியமான தொழிலாளர்கள். தொழிற்சங்கத்தில் அவர்களுக்கான பிரிவு பெரிய அளவில் செயல்பட்டு வந்தது. தொலைப்பேசி ஊழியர்களில் பொறியியல் பிரிவு ஊழியர் எனப்படும் இவர்களுக்கு ஏனைய அரசு ஊழியர்போல தவறாது ஞாயிற்றுக்கிழமை விடுமுறை என்பது கிடையாது. ஞாயிறு உட்பட வாரத்தில் எந்த நாளாவது விடுமுறையாகக் குறிக்கப்படும்.

அந்த வகையில் ரவிக்கண்ணனுக்கு அந்த ஞாயிற்றுக்கிழமை விடுமுறையாகக் அமைந்துவிட்டது. அவருக்கு மிக மிக நெருங்கிய நண்பன் சடகோபனுக்கு அந்த ஞாயிற்றுக்கிழமையன்று டூட்டி இருந்தது.



லைன்மேன்களுக்கு மூன்று ஷிஃப்டுகளுண்டு. காலை எட்டு, ஒன்பது மற்றும் பதினோறு மணி ஷிப்டு என்று ஞாயிற்றுக்கிழமைகளில் எட்டும் ஒன்பது இரு ஷிப்டுகள் மட்டுமே உண்டு. அன்றைக்கு நானும் டூட்டியிலிருந்தேன், பதினோறு மணி ஷிஃப்டில். ரவிக்கண்ணனுக்கு டூட்டியிருந்து சடகோபனுக்கு டூட்டியில்லாத நாளில், வீட்டில் பொழுது போகாததால் சடகோபனும் ரவிக்கண்ணனோடு துணைபோல போவார். போலவே சடகோபனுக்கு டூட்டியிருந்து ரவிக்கண்ணனுக்கு டூட்டியில்லாத நாளில் அவரும் நண்பனுக்குப் பேச்சுத்துணையாக கூடப் போவதுண்டு.

சடகோபன், மதுராந்தகத்திலிருந்து டூட்டிக்கு வந்து போகிறவர். இருவருமே விவசாயத் தொழில் புரியும் குடும்பப் பின்னணியிலிருந்து அரசாங்க வேலைக்கு வந்தவர்கள். இருவருமே முப்பது வயதுக்குள் இருப்பார்கள்.

சடகோபன் ஒன்பது மணி டூட்டிக்கு எங்களிடம் எட்டேமுக்காலுக்கே பேசி புகார்களைக் கேட்டு எழுதிக் கொள்ளுவார், அனாவசிய பேச்சு, விவாதம், அடிக்கடி டீ, காபி, சிகிரெட் பழக்கம் எதுவுமற்றவர். சாயங்காலம் ஐந்து மணி வரை அவர் டூட்டி பார்க்கவேண்டும். பெரும்பாலோர் நான்கு – நாலரைக்கே 'ஏர் கட்டிவிடுவார்கள்.' அவர்கள் பேரில் பழுதுகள், பார்க்கப்படாத புகார்கள் அப்படியே இருக்கும். மறுநாள் தான் கவனிப்பார்கள். பொதுமக்களிடமிருந்து இவர்கள் மீது புகார்கள் வரும். ரவிக்கண்ணன் பேரிலோ சடகோபன் பேரிலோ புகார்கள் வந்ததில்லை. ஐந்து மணிக்கு டூட்டி முடிந்த பின்னரும் ஒருமுறை தொடர்புகொண்டு பேசுவார் சடகோபன்,"சார், என் ஜோன்ல ஃபால்ட் எதாச்சுமிருக்கா,, பாருங்க?" என்பார்.

"ஒரு கம்ப்ளெயிண்ட் வந்திருக்கு, காலைல பார்த்துக்கலாம், ஒங்க டூட்டி முடிஞ்சிட்டதே?" என்று சொன்னால், அவர் உடனே கூறுவார்: "பரவாயில்ல, சொல்லுங்கசார், எனக்குஏழுமணிக்குதான்

ட்ரெயின், அதுவரை சும்மாயிருக்கிறதுக்கு ஃபால்ட் பார்த்திடறேன். எப்படியிருந்தாலும் நாளைக்கு நாந்தானே பாக்கணும்."

வாங்கிச் சென்று பழுதைக் கண்டறிந்து சரி செய்துவிட்டுத்தான் மதுராந்தகத்து வண்டியேறுவர் சடகோபன்.

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை. தொலைப்பேசி இலாகாவின் வாரநாட்கள் என்பது ஞாயிற்றுகிழமையிலிருந்து சனிக்கிழமை வரை. வெள்ளிக்கிழமையன்று அடுத்த வாரத்துக்கான டூட்டி சார்ட் தயாராகிவிடும்.

"உனக்கு இந்த சண்டே டூட்டியிருக்கு. எனக்கு ஆஃப்" என்றார் ரவிக்கண்ணன் சடகோபனைப் பார்த்து. ஆனால், அவரால் விடுமுறையென்று வீட்டில் முடங்கியிருந்து பழக்கமில்லை. சடகோபனுக்கும் அப்படியே. அந்த ஞாயிற்றுக்கிழமை டூட்டியிருக்கும் சடகோபனுடன் ரவிக்கண்ணனும் போய்ச் சுற்றுவார். அவருக்கு புகார்கள் நிறைய் இருந்தால் வேலைப் பளுவைக் குறைக்கலாமென்று ரவிக்கண்ணனும் கொஞ்சத்தை அவரிடமிருந்து வாங்கிப்போய்ப் பார்த்து சரியாக்குவார். ரவிக்கண்ணனுக்கு டூட்டியிருந்து சடகோபனுக்கு விடுமுறையென்றிருந்தால் ரவியுடன் சடகோபன் போவார். இருவருக்கும் ஞாயிறு அன்று ஒன்றாக டூட்டியிருப்பது அரிதானது.

இந்த விதமாக இன்றும் சிலர் தங்களுக்கு டூட்டியில்லா நாளில் டூட்டியிலிருக்கும் தம் நண்பர்களோடு கூட சேர்ந்து அலைவார்கள். அன்று தம் நண்பரின் வேலையையும் பகிர்ந்துகொண்டு கூடமாட செய்து கொடுத்து வருவார்கள்.

அன்றைக்கென்று சடகோபன் கையில் நிறைய புகார்களிருந்தன. பரங்கிமலை பட்ரோடு, முகலிவாக்கம், நந்தம்பாக்கம், மணப்பாக்கம், போரூர் பகுதியின் லைன்மேன் அவர். அப்பகுதியில் நிறைய தொழிற்கூடங்களிருக்கும். லார்சன் அண்டு டூப்ரோ, எஸ்.என்.எஸ், டி.எஸ்.ஆர், டபிள்யூ எஸ். இன்ஸூலேட்டர்ஸ் என்று பெரிய பெரிய தொழில் நிறுவனங்கள் இந்தப் பகுதியிலிருந்தன. ஞாயிற்றுக்கிழமைகளில் இருவர்தான் டூட்டியிலிருப்பார்கள். ஒருவர் முடித்துவிட்டு போய்விட்டார். சடகோபனுக்கு பகல் பத்து மணி ஷிஃப்டு. கையில் நிறைய பழுதுகள் இருந்தன.

"அதெல்லாம்ம் ஒண்ணுமில்லே. முடிச்சிட்டுத்தான் போவேன்", என்றார் சடகோபன். மற்ற லைன்மேன்கள் வேறுமாதிரி சொல்லுவார்கள்.

"சார், பெண்டிங் வைங்க. நாளைக்கு நான் தான் காலை டூட்டி, முதல் கேஸா பாத்திடறேன்," என்பார் ஒருவர்.

"இல்லீங்க, காலேல ஃபாஸ்ட் இது. டியூரேஷன் ஆகுது. டியூரேஷன குறைக்கணும்னு ஜி.எம்.ஆர்டர்" என்று சொல்லிப் பார்ப்போம்.

"இன்னிக்கு கம்பெனி மூடியிருக்கும். டோர் லாக்குனு போட்டு பெண்டிங் வை சார்."

"லைன் வரை சரியாயிருக்கானு பாத்திட்டு கடைசி பாயிண்ட்ல ஒரு டெஸ்ட் குடுப்பா."

"நீ சரியான பேஜாரு கிராக்கி சார்."

அன்றைக்கு டபிள்யூ எஸ்.இன்சுலேட்டர் நிறுவனத்திலுள்ள 'பிரைவேட் ஆட்டமாடிக் பிரான்ச் எக்ஸ்சேஞ்சின்' (PABX) பிரதான இணைப்பு எண் (Main Junction Line) வேலை செய்யவில்லை என்பது முக்கிய புகார். அப்போதெல்லாம் வாடிக்கையாளரின் இடம் வரை, கம்பங்கள் பூமியில் பதிந்து அவற்றின் வழியாக அவற்றின் உச்சியில் பொருத்தப்பட்ட பீங்கான் இன்சுலேட்டர்கள் வழியே தொலைப்பேசிக் கம்பிகள் இழுக்கப்பட்டிருக்கும். ஒரு மையத்தில் அக்கம்பிகள் பூமிக்குள் புதைக்கப்பட்ட கேபிளில் சேர்ந்துவிடும். ஒரு கம்பத்துக்கும் இன்னொரு கம்பத்துக்கும் இடையிலுள்ள கம்பியிழுப்பை 'ஸ்பான்' (SPAN) என்பர். அவ்வாறு 50, 60, 70 ஸ்பான்கள் கடந்து வாடிக்கையாளரின் இடத்தை அதாவது தொலைப்பேசிக் கருவியை அடையும்படியாயிருக்கும். ஒரு பழுதை சரி செய்ய ஒவ்வொரு ஸ்பானாக – கம்பம் கம்பமாக ஏறிப்பார்த்து தொலைப்பேசி தொடர்பகத்தோடு, தன் கையிலுள்ள Hand Set மூலம் பேசி சோதிக்கக் கேட்டபடியே லைன்மேன் போக வேண்டும். நடுவிலேயே பழுது அகப்பட்டு சரிபார்க்கப்பட்டால் ஆயிற்று. இல்லையென்றால் தொடர்ந்து சரியான சோதனை (Good Test Result) முடிவு கிட்டும் வரை அவர் கம்பங்களில் ஏறியேறி இறங்கத்தான் ஆகவேண்டும். சில சமயம் தேன் கூடு கட்டியிருந்து லைன்மேன் கடிபட்டதான சம்பவமுண்டு.

"சார், குளவிங்க கூடு கட்டியிருக்கு.", என்பார்கள். பீங்கான் பாதெட் இன்சுலேட்டுகுள் பாம்பு ஏறி படுத்திருந்தான செய்தியுண்டு.

அன்றும் அப்படித்தான். சடகோபன் ஒவ்வொரு கம்பமாக ஏறியேறி சோதித்தவாறே பழுதைத் தேடி முன்னேறிக்கொண்டே போனார். கூடவே பேச்சுக் கொடுத்தவாறு ரவிக்கண்ணனும் போனார்.

"எழுபது ஸ்பான் ஓட்டியிருக்காரு எஸ்.ஐ," என்றார் சடகோபன். ஒரு சிறு வளைவான திருப்பம், ஐம்பதாவது ஸ்பான். அந்தக் கம்பத்தைச் சுற்றி வேலிக்காத்தான் முட்செடிகள் புதர் மண்டியிருந்தன. சடகோபன் அந்தக் கம்பத்தைப் பிடித்துக் கொண்டு ஏறப்போனபோது ரவிக்கண்ணன் பிடித்துத் தடுத்துவிட்டு கூறினார்.



“நாப்பத்தொம்பது ஸ்பான் ஏறியிருக்கே, வுடு, நாம் பாக்கறேன், நவுரு.”

“வேணாம் ரவி, இங்கதான் ஃபால்ட் இருக்குனு நினைக்கிறேன். நானே பாக்கறேன்,” என்று கூறிய சடகோபன் சைக்கிளை ஸ்பாண்ட் போட்டு நிறுத்தின வேகத்திலேயே ரவிக்கண்ணனும் தன் சைக்கிளை நிறுத்திவிட்டு நண்பனை விலக்கியவராய் கம்பத்தில் ஏறினார். அவர் சற்று பாரியான உடம்பு. கம்பம் சற்று ஆடியது.

“சடகோபா, பிளைய்யர தூக்கிப் போடு, இங்க தான் ஃபால்டு, கண்டுபுடிச்சிட்டேன்,” என்று சொல்லிவிட்டு கம்பத்தின் உச்சியில், பீங்கான் இன்சுலேட்டர்கள் பொருத்தப்பட்டுள்ள சிறு இரும்பு ப்ராக்கெட் மீது ஒரு காலை வைத்துக்கொண்டார். வெள்ளை நிற பீங்கான் இன்சுலேட்டர்களை ‘Pothead’ இன்சுலேட்டர்கள் என்பர். இவற்றின் கழுத்தைச் சுற்றி கட்டப்பட்டு அங்கிருந்து அடுத்த கம்பத்து இன்சுலேட்டருக்கு கம்பிகள் இழுக்கப்பட்டிருக்கும். பாதெட் இன்சுலேட்டர்கள் பொருத்தப்பட்டுள்ள ‘இரும்பு’ – டெலிபோன் கம்பத்தின் உச்சியில் ஆங்கில எழுத்து ‘T’ (டி) வடிவில் இணைக்கப்பட்டிருப்பதால், இதை ‘டி’ என்றே குறிப்பிடுவார்கள்.

சடகோபன் தன் பிளையரை மேல் நோக்கி ரவிக்கண்ணன் பிடித்துக்கொள்ளும் வகையில் நிதான கதியில் வீசினார். ரவிக்கண்ணன் வளைந்த குனிந்து பிளையரைப் பற்றிக்கொண்ட வேகத்தில் நிமிர்கையில் மின்னல் தாக்கினாற்போன்ற அடியதிர்ச்சியுடன் சொல்ல முடியாத வலியோடு தூக்கி வீசப்பட்டார். பெரிய மரண ஓலக்குரல் ஒலிக்க ரவிக்கண்ணன் சற்று தூரமாய் சாலையோரத்தின் அருகாய் வீசப்பட்டு விழுந்து கிடந்தார். ஒரு கணம் உணர்வு இருந்து மறுகணம் மயக்கமுற்றார். செய்வதறியாது தன் தண்ணீர் பாட்டிலிலிருந்து தண்ணீரை அவர் முகத்தில் தெளித்துவிட்டு சாலையில் போவோரையழைத்தார் சடகோபன். கூட்டம் கூடிவிட்டது. சடகோபன் கைப்பேசியின் வழியே எக்ஸ்சேஞ்சுக்குப் பேச நான் தான் பதிலளித்தேன். அவரை அப்படியே இருக்கச் சொல்லிவிட்டு இணைப்பக தலைமையதிகாரியான உதவிப் பொறியாளரோடு தொடர்புகொண்டு விஷயத்தைச் சொன்னேன்.

“ரவிக்கண்ணன் என்ன டூட்டி?”, என்று கேட்டார் அசிஸ்டண்ட் இஞ்சினியர்.

“டூட்டி கிடையாது சார், ஆஃப்.”

“அப்போ ஆரு டூட்டி?”

“சடகோபன் சார்.”

“சடகோபன் வூட்லயிருக்கான், இவன் டூட்டி மேல இருக்கானா?”

“இதெல்லாம் இருக்கட்டும் சார். ரவிக்கண்ணனை ஆஸ்பத்தரிக்கு கொண்டு போணும். வேனோ ஜீப்போ அனுப்பி வைங்க.”

“சண்டேலே வெய்கிள் எடுக்கக் கூடாது. நீங்கெல்லாம் செய்யற தப்புக்கு நானும் கூட வரணுமா? உங்க மூணு பேருக்கும் மெமோ குடுக்கப்போறேன்.”

“சார்.. அதெல்லாம் அப்புறம் வச்சிக்கலாம் சார்,

உங்ககிட்ட ஜீப் டிரைவருக்கு ஹாட் லைன் இருக்கு. கூப்பிட்டு அனுப்புங்க சார்."

"அதெல்லாம் முடியாது, டிரைவர் செங்கல்பட் போயிருக்காரு, ஒரு காரியம் செய்யுங்கோ அங்கேயிருக்கிற கம்பெனியில கார் கேளுங்கோ, சொல்லிவிட்டு அந்த அதிகாரி, "சடகோபனை பேச சொல்லுங்கோ," என்றார். நானே சடகோபனுக்கும் அதிகாரிக்கும் பேசுவதற்கு இணைப்பேற்படுத்திக் கொடுத்துவிட்டு உரையாடலை ஒட்டுக் கேட்டேன். அவர் சடகோபனை சரமாரி திட்டிவிட்டு அவர்கள் இருவர் மீதும் கடும் நடவடிக்கை எடுக்கப்போவதாகக் கூறி தொடர்பை துண்டித்துக் கொண்டார்.

சட்டென்று எனக்கு ஒருவரின் நினைவு வந்தது. இளநிலைப் பொறியாளர் கோபாலகிருஷ்ணன். இந்த ஜே.இ. இந்தப் பகுதியில் செல்வாக்குமிக்கவர். எல்லாவித கம்பெனிகளையும் தொலைத்தொடர்பு ரீதியாக தம் கையில் போட்டுக் கொண்டிருப்பவர். மிகச் சிறந்த வேலையில் கில்லாடி ஜீனியர் எஞ் சினியர். என் மீது அபார நம்பிக்கையும் பாசமும் வைத்திருந்தவர். அவர் வீட்டுக்கு தொடர்புகொண்ட போது அவரது மனைவிதான் பேசினார்.

"அவரில்லே", என்றார்.

"ரொம்ப அர்ஜண்ட் மேடம், சார் எங்கே போயிருக்காரு?"

"சினிமாக்கு போறேனு போனாரு. எந்த தியேட்டர்னெல்லாம் தெரியாதே."

இதற்குள் அவருடைய பெண் பேசுவதுபோல தோன்றியது. மேடம் என்னோடு பேசி, "தாம்பரத்திலதான், நாஷனல் தியேட்டராம்," என்று தெரிவித்தார். நான் ஒருவன் தான் எக்ஸ்சேஞ்சில் இருக்கிறேன். மாலை ஏழு மணிக்கு சுவிட்சு ரூம் பணிக்கு ஒருவர் வருவார். நேஷனல் திரையரங்கின் தொலைப்பேசி எண்ணைத் தேடி, டயலைச் சுழற்றிப் பேசினேன்.

"டெலிபோன் எக்ஸ்சேஞ்சிலேந்து பேசறேன், மானேஜரக் கூப்பிடுங்க."

"மானேஜர் தான் பேசறேன், குட் ஈவினிங், சொல்லுங்க சார்."

"எங்க ஜே.இ. கோபாலகிருஷ்ணன் சினிமா பார்க்க அங்கே வந்திருக்காரு. ஒரு அவசர காரியம், கூப்பிட முடியுமா?"

"எந்த க்ளாசில இருக்காரோ, எப்படினு கூப்புடறது?"

"ஒரு வேலை செய்யிங்க சார், ஆபரேட்டரை அவசரமா ஒரு ஸ்லைடு எழுதி, ஓடற படத்து மேலேயே போட்டுக் காட்டச் சொல்லுங்க. இந்த மாதிரி, டெலிபோன் ஜே.இ கோபாலகிருஷ்ணன். அர்ஜெண்டா எக்ஸ்சேஞ்சுக்கு பேசனும் அப்படினு ஸ்லைடு போடுங்க," என்று யோசனை கொடுத்தேன். அவர் புரிந்துகொண்டவராக, யாமிடமிருந்தோ வெற்றிலைப் பாக்கு போடக்கூடிய சுண்ணாம்பைக் கொண்டு போய் ஆபரேடரிடம் தந்து விஷயத்தைச் சொல்லியிருக்கிறார். ஆபரேடர் சாதா கண்ணாடியொன்றின் மேல் சுண்ணாம்பைத் தடவி மின் விசிறியில் காயவிட்டு நான் சொன்னதை ஓர் ஆணியால் கிறுக்கி புரொஜெக்டரில் ஓடும் சினிமாவின் பிம்பத்தின் மேல் சூப்பர் இம்போஸ் செய்து திரையில் காட்டியிருக்கிறார். பார்வையாளர்கள் கசமுசவென அமைதியிழந்து அங்குமிங்கும் பார்க்க, ஜே.இ. கோபாலகிருஷ்ணன் எழுந்து ஓடி மேனேஜர் அறையைடைந்து எக்ஸ்சேஞ்சுக்கு போன் செய்தார்.

"யாருங்க?"

"சார் நான்தான், அர்ஜெண்ட்."

"ஹாலிடேலே சினிமாகூட பாக்கவுடமாட்டீங்க, சரி, சொல்லுங்க."

நான் சுருக்கமாய் எல்லாவற்றையும் கூறினேன்.

"எத்தனாவது ஸ்பான்?"

"அம்பதாவது ஸ்பான் சார்."

"அய்யய்யோ, அங்கே நம்ப ஓவர்ஹெட் லைன் திரும்பற இடத்திலதான் லெவன் கே.வி. ஹைடென்ஷன் எலெக்டிரிக் வயர் க்ராஸ் பண்ணுது. அறிவு கெட்டவன் அதைக் கவனிக்க வேணாம். அதில டச்சாயிருக்கும் ஒடம்பு. அது லெவன் ஜே.வி. ஹைடென்ஷன் வயர். ம், சரி, நா வண்டிக்கு ஏற்பாடு பண்ணி அதிலே நானே வர்ரேன்" என்றார் ஜே.இ.

அப்போது இன்றுள்ள சர்வதேச விமான நிலையமல்லாம் கிடையாது. மீனம்பாக்கம்தான் விமான நிலையம். விமானநிலையத்திலும் இந்த ஜே.இ. கோபாலகிருஷ்ணனுக்கு மதிப்பும் செல்வாக்குமிருந்தது. இந்தியன் ஏர் லைன்ஸ் உயர் அதிகாரியிடம் எல்லாவற்றையும் எடுத்துச் சொல்லி, எங்கள் துறை ஜீப் ஓட்டுனர் வெளியூர் போயிருப்பதைக் கூறி அவர்களின் கார் ஒன்றைக் கேட்டுவாங்கி தானும் உட்கார்ந்து நேரே ஸ்தலத்துக்கே விரைந்தார். கூட்டம் கூடியிருந்தது. எல்லோருமாய் சேர்ந்து வண்டியில் கிடத்தி பொது மருத்துவமனைக்கு முன்னால் இராணுவ மருத்துவமனைக்கு கொண்டு போனார் ஜே.இ.

சடகோபன், இரு சைக்கிள்களையும் அந்தப் பகுதியில் தேநீர் அருந்தும் கடையில் சொல்லி பூட்டி வைத்துவிட்டு ரவிக்கண்ணனோடு காரில் போய்விட்டார். ராணுவ ஆஸ்பத்தரியில் இம்மூவரையுமே தெரியும். முதல் உதவியெல்லாம்

செய்துவிட்டு, முதுகெலும்பு முறிந்திருப்பதால் பெரிய பொது மருத்துவமனைக்கு கொண்டுபோகும்படி அறிவுறுத்தி விவரமாக எடுத்துக் கொடுத்துவிட்டார்கள்.

ரவிக்கண்ணன், சென்னை பொது மருத்துவமனையில் (G.H) ஆறுமாத காலம் சிகிச்சை பெற்று படுத்தபடுக்கையாயிருந்தார். இடுப்புக்கு கீழே எந்த அசைவுமின்றி, எவ்வித உணர்வுமின்றிக் கிடந்தார். மெக்கானிக் பயிற்சிக்கு உத்தரவு வந்து திரும்பிப் போய்விட்டது. ஆறு மாதம் கழிந்து வீட்டுக்கு கொண்டு வந்து வைத்துப் பார்த்தார்கள். ரவிக்கண்ணன் இறந்து போனார். தொழிற்சங்கம் முயற்சியெடுத்து அவருடைய இளம் மனைவிக்கு துப்புரவாளர் வேலை வாங்கித் தந்தது. சடகோபன் தாடி வளர்த்து சந்நியாசி போல நடமாடினார். தனக்கு மெக்கானிக் பயிற்சிக்கு அழைப்பு உத்தரவு வந்தபோது அதை நிராகரித்துவிட்டு லைன்மேன் பணியையே செய்து கொண்டிருந்தார்.

ஓர் அசாதாரண லைன்மேன் இந்த சடகோபன். புத்தாண்டு பிறந்து ஜனவரி - பிப்ரவரிகளில் நிறுவனங்கள், கடைகளில் இருந்து தொலைப்பேசி லைன்மேன்கள், டெலிஃபோன் இன்ஸ்பெக்டர்கள், இளநிலைப் பொறியாளர்கள், பிற ஊழியர்களுக்கு நிறைய சின்னச் சின்ன பரிசுப் பொருட்கள், காலண்டர்கள், டைரிகள் என தருவதுண்டு. அவர்கள் எக்ஸ்சேஞ்சுக்குள் பணிபுரியும் எங்களுக்கும் சேர்த்து கேட்டு வாங்கித் தருவதுமுண்டு. ஆனால், இதுபோன்ற விஷயங்களைக்கூட சடகோபன் வைத்துக்கொண்டதில்லை. அவர் தானாக சென்று டைரி காலண்டர்களைக் கேட்டு வாங்கவே மாட்டார். தான் செய்யும் சேவையைப் பாராட்டி, வாடிக்கையாளர் எவரேனும் பணம் எதாவது 'கைமாறு' போல அளிக்கமுன் வந்தால் புன்முறுவலோடு மறுத்து ஒதுக்குவார். அதே சமயம் இலாகா வரம்புக்கு மேல் எதையும் செய்துவிடமாட்டார். இந்த ஊழியர் எதையும் "கற்றுக் கொள்ளவேண்டும்", என்பதில் முனைப்பு காட்டியவர். சில தபால் நிலையங்களில் தந்திப் பிரிவும் தந்திச் சேவையுமிருக்கும். தந்திப் பொறி ஒரு குறிப்பிட்ட தூரம் குறிப்பிட்ட நிலைவரைக்கும் தொலைப்பேசி கம்பிகளால் இயக்கப்பட்டன. பழுது ஏற்பட்டு, தந்தி சேவைப் பாதிக்கப்பட்டால், தபால் அலுவலகம் தொலைப்பேசிக்கு புகார் தருவார்கள். தொலைப்பேசி லைன்மேன் தம் தொலைப்பேசி கம்பிகள் எங்கேனும் பழுதடைந்திருக்கிறாதென சோதித்துப்பார்ப்பார். கம்பத்தில் ஏறி, ஒவ்வொரு கட்ட பரிசோதனையை எக்ஸ்சேஞ்சோடு மேற்கொண்டு, தொலைப்பேசி கம்பிகளில், பழுதிருந்தால் சீராக்கி, தந்திப் பொறி சரியாக இயங்குவதை உறுதிசெய்து கொண்டு புகாரை முடிப்பார். ஆனால், பழுது என்பது தொலைப்பேசி கம்பிகளின் எல்லையைத் தாண்டி, தந்திக் கம்பியின் எல்லைக்குள் சென்றால், அதை தொலைப்பேசிக்காரர் கவனிக்க முடியாது – கவனிக்க மாட்டார் – கவனிக்கவும் தெரியாது. அதற்கு மேல அதைக் கவனிப்பதும், கவனிக்கும் பொறுப்பும் தந்தித்துறை லைன்மேனுக்கு உரியது. ஆனால், தந்தித் துறை லைன்மேன் பதவியென்பது, தொலைப்பேசி லைன்மேன்கள் போல கூடுதலான எண்ணிக்கைக் கொண்டிருக்காது. இரு தந்தி நிலையங்களுக்குச் சேர்த்துக்கூட ஒரேயொரு தந்தி லைன்மேன் இருப்பார். எனவே, அவர்கள் பக்கம் ஏற்படும் பழுதுடன் சரிசெய்யப்படுவதில் தாமதமேற்பட்டு, ஒரு வாரம் – பத்து நாட்களுக்கு பொதுமக்களுக்கு அந்த குறிப்பிட்ட தந்தியலுவலகத்தில் தந்திச் சேவை கிடைக்காது. இந்த இடத்தில் தான் சடகோபன் கைகொடுப்பார்.

தொலைப்பேசி 'லைன்' அமைப்பை சோதிப்பதைக் காட்டிலும் 'மார்ஸ் சர்க்யூட்' (Morse Circuit) எனப்படும் தந்திக் கம்பியின் 'லைன்' அமைப்பை சோதிப்பது சிக்கலானது. எக்ஸ்சேஞ்சுகளில் ஒரு சிலர்தான் நிபுணர்களாயிருப்பார்கள். காரணம் தந்தி சிறப்பு சர்க்யூட் அடிக்கடி பழுதடையாது, எப்போதாவது தான் சேதமடையும். டெலிஃபோன் லைன் என்பது பாசிடிவ் – நெகடிவ் என்ற இரு கம்பிகளால் உயிர்துடிப்பது. ஆனால், தந்தி லைன் என்பது 'ஒற்றைக் கம்பி' அமைப்பில் இயங்குவது. மின்சக்தி ஒரே கம்பியில் பயணித்து 'SOUNDER' எனும் இயந்திரம் வரை சென்று அதை இயக்கிவிட்டு மீண்டும் செய்தியை எடுத்து வெளியேற அதே ஒற்றைக் கம்பி வழியே பயணமாகிறது. இந்த ஒற்றைக் கம்பியிலிருந்து தந்திப் பொறியான 'SOUNDER' வரையிலான விஷயம் தந்தித்துறையின் தந்தி லைன்மேனைச் (TELEGRAPH LINEMAN) சேர்ந்தது. அவர் வரும் வரை தந்திச் சேவையில் ஏற்படும் தாமதத்தையும் பொதுமக்களின் அசௌகரியத்தையும் கருத்தில் கொண்டு சடகோபன் தந்தியலுவலக அதிகாரியின் சம்மதம் அனுமதிகளோடு தான் ஏற்கனவே தன் – ஆர்வம் மேலிட்டு கற்றறிந்த தந்தி லைன் அமைப்பைக் கொண்டு தந்திப் பழுதைத் துரத்திச் சென்று ஒலிக்கருவியான SOUNDER வரையிலும் சோதித்து பழுதை சரியாக்குவார். ஒருவேளை SOUNDER இலேயே பழுதிருந்தால் அதை தந்திக்காரர்கள் மாற்றச் செய்யவேண்டியிருக்கும்.

இந்திய மத்திய அரசு தொலைப்பேசி ஊழியர்களின் மிகச் சிறந்த சேவையைப் பாராட்டி ஆண்டு தோறும் 'சஞ்சார் ஸ்ரீ' (SANCHAR SREE AWARD) எனும் உயரிய விருதை அளித்து வந்தது. டெல்லியில் சென்று குடியரசு தலைவரிடம் பெரும் பெருமைக்குரிய இவ்விருது ஒரு லட்சம் ரூபாய் ரொக்கப் பரிசு உள்ளிட்டது. சஞ் சார் ஸ்ரீ விருதுக்கு ஓர் ஊழியரை பரிந்துரைப்பது கோட்டப் பொறியாளரில் தொடங்கி, துறையின் பொதுமேலாளர் வரை போகவேண்டிய பணியாகும். சடகோபன் சஞ்சார் ஸ்ரீ விருது பரிந்துரைக்கப்பட்டு விருதுபெற்ற ஊழியர்.

(தொடரும்)

# லாவண்யா கவிதைகள்



## 1

## பெருந்தேன் நட்பு சிறுந்தேன் நட்பாகி பொய்த் தேனான கதை

ஸ்வான்சுவுக்கும் எனக்கும் எந்த சம்மந்தமும் இல்லை
ஸ்வான்சுவுக்கும் க்ளாராவுக்கும் பெருந்தேன் நட்பு
எனக்கும் க்ளாராவுக்கும் சிறிய அளவிலான நட்பு
அது பெருந்தேன் நட்பாகக் கனியக் காத்திருந்தது

ஸ்வான்சுவும் க்ளாராவும் நானும்
ஏதோ விழாவில் சந்திக்கிறோம்
என்னோடு க்ளாரா தாளாரமாய் கைக்குலுக்குகிறாள்
கூடவே தோளையும்
அவளுடனான என் நட்பு சிறுந்தேன் நட்பாகிறது

ஸ்வான்சு வந்தவுடன்
க்ளோரா சொல்லாமல் கொள்ளாமல்
இடம்பெயர்கிறாள்

ஸ்வான்சுவிடம் அவள் பேசிய
மொழியின் கிசுகிசுப்பா
ஸ்வான்சு மேடையிலிருந்து கண்ணும் அகற்றாமல்
பக்கவாட்டில் தலைசாய்ந்து "ம்" என்றதா
அவனுக்கு மீண்டும் அதே விஷயத்தையோ
வேறு எதையோ க்ளாரா சொல்லும் பரவசமா
மீண்டும் க்ளாராவைப் பார்க்காமலே
அவள்சொல்வதைஆழமாய்கேட்டுஉள்வாங்கும்பாவனையா
அல்லது வேறு ஏதோ ஒன்றோ

க்ளாராவுக்கும் எனக்குமான நட்பு
பொய்த் தேன் நட்பாய்
சிதைந்தற்கான காரணத்தை
இன்னுமின்னும் தேடிக் கொண்டிருக்கிறேன்



2

## ரஸமலாய் 47 ரூபாய்

ரஸமலாய் சாப்பிட்டு இருக்கின்றீர்களா?
ரஸ் என்ற பாற்கடலில்
மிதக்கும் வடை போலத் தட்டப்பட்ட பாலேடு
நடுவானில் மிதக்கும் முழுநிலவு
அல்லது
மஞ்சள் கலக்கிய பாற்கடலில் மிதக்கும் பரந்தாமன்

பாற்கடலில் மிதக்கும் மெலிதாய் வெட்டப்பட்ட பிஸ்தா
பச்சை கண்கள் போலிருக்கும்
பாலேட்டில் பொதிந்திருக்கும் பிஸ்தா துண்டுகள்
பரந்தாமனின் கண்கள் போலவே அழகூட்டும்
மலாய் முகத்துக்கு

உன்னோடு கனிவான காதலியிருந்த போது
ரஸமலாய் உண்ண உண்ண இனித்தது
பிஸ்தா கண்கள் உண்ணும் போது
அது பிஸ்தாவின் சுவை மட்டுமே தருகிறது
அப்போது உண்ணும் போது ரஸமலாய்
அத்தனை மென்மையாய் விண்டு விண்டு உண்கிறேன்
அந்த இனிமையை வார்த்தையில் கலந்து
உன்னிடம் சொல்லிச் சொல்லி உண்கிறேன்
ரஸ்மலாய் இன்னும் இன்னும் இனிக்கிறது

இப்போதும்
ரஸமலாய் அதே போலவே இனிக்கிறது
ஆனால் நான் அதில் மிதக்கும் கண்களை
உன் கண்களாய் எண்ணி உண்கிறேன்
அதற்கு பிஸ்தாவின் சுவையில்லை
மலாய்யை உன் முகமாய் நினைக்கிறேன்
குத்தி உடைத்து
அழுத்திக் கடித்து உண்கிறேன்

ரஸ்மலாயின் விலை 47 ரூபாய்
கிடைத்த நிம்மதிக்கு
47 ரூபாய் குறைவு தான்.

லாவண்யா <lavanya.sundararajan@gmail.com>

# தேவி

## முன்ஷி ப்ரேம்சந்த்

### இந்தியிலிருந்து தமிழில்: கயல்

ஈரமான அந்த இரவில் நான் வராந்தாவில் நின்று கொண்டிருந்தேன். என் கண் முன்னே அமீன் - உத் தௌலா பூங்கா தூக்கத்தில் ஆழ்ந்து கிடந்தது. யாருமற்ற அந்தப் பூங்காவில் ஒரு பெண் மட்டும் பெஞ்சில் அமர்ந்திருந்தாள். பூங்காவிற்கு வெளியே, சாலையின் ஓரத்தில் நின்று கொண்டிருந்த ஒரு ஃபக்கீர் "கடவுளின், ரசூலின், ராமரின் பெயரால் இந்தக் குருடனுக்குக் கருணை காட்டுங்கள்" என்று வழிப்போக்கர்களிடம் இரந்து கொண்டிருந்தான்.

சாலையில் எல்லாவிதமான போக்குவரத்தும் ஓய்ந்துவிட்டிருந்தது. வெகு குறைவான ஆட்களே காணப்பட்டனர். முதலில் திருவிழாவில் ஒலிக்கும் இடிச் சத்தமாக இருந்த ஃபக்கீரின் ஒலி பிறகு திறந்தவெளி முழுவதையும் தன் சத்தத்தால் நிறைத்துக் கொண்டிருந்தபோது திடீரென்று அந்தப் பெண் எழுந்தாள். சுற்றும் முற்றும் பார்த்து, ஃபக்கீரின் கையில் எதையோ வைத்தாள். பிறகு நகர்ந்து, மிக மெதுவாக அவனிடம் ஏதோ சொன்னாள். இப்போது என் கண்ணுக்கு ஃபக்கீரின் கையில் ஒரு துண்டுக் காகிதம் தெரிந்தது. அவன் அதை மீண்டும் மீண்டும் கசக்கியபடி இருந்தான். அந்தப் பெண் தான் அவன் கைகளில் இந்தக் காகிதத்தைக் கொடுத்தாளா?

இதன் ரகசியம் என்ன என்பதை அறியும் பொறுமையின்றி நான் வேகமாகக் கீழே இறங்கி ஃபக்கீரின் அருகே சென்றேன். நான் வந்த ஓசையைக் கேட்டதும், ஃபக்கீர் அந்தக் காகிதத்தை என்னிடம் எடுத்து நீட்டி, "ஐயா, இது என்ன என்று பாருங்கள்?" என்று கேட்டான்.



நான் பார்த்தேன். அவன் கையில் ஒரு பத்து ரூபாய் நோட்டு இருந்தது. "இது பத்து ரூபாய் நோட்டு. உனக்கு எங்கே கிடைத்தது?" என்று கேட்டேன்.

நான் வேறு எதுவும் சொல்லவில்லை. இப்போது இருட்டில் அந்தப் பெண் வந்து போனது ஒரு கனவாக மாறிப் போயிருந்தது.

சந்து சந்தாக பல தெருக்களைக் கடந்து சிதிலமடைந்த ஒரு வீட்டை அடைந்த அவள், கதவின் பூட்டைத் திறந்து உள்ளே சென்றாள்.

இரவில் எதையும் விசாரிப்பது பற்றி யோசிக்காமல் நான் திரும்பி வந்துவிட்டேன். இரவு முழுவதும், அப்படியே படுத்துக் கிடந்த நான் விடிந்ததும் அந்தத் தெருவுக்குச் சென்றேன். அங்கு விசாரித்ததில் அவள் ஒரு அனாதை விதவை என்று அறிந்தேன். நான் அவள் வீட்டு வாசலில் நின்று, "தேவி, நான் உன்னைப் பார்க்க வந்திருக்கிறேன்" என்று அவளை அழைத்தேன்.

அந்தப் பெண் வெளியே வந்தாள். வறுமையின், வறுமை வாழ்வின் புகைப்படமாகக் கண்களுக்குத் தெரிந்தாள்.

நான் தயக்கத்துடன் "இரவு நீங்கள் ஃபகிர்..." என்று பேசத் துவங்கினேன்.

தேவி அதை இடைமறித்து, "ஐயா, இது ஒரு விசயமா என்ன, எனக்கு அந்தத் தாள் எங்கோ கிடைத்தது. அது என்னிடம் இருப்பதால் மட்டும் எனக்கு என்ன பயன்?" என்றாள்.

நான் அந்த தெய்வத்தின் காலடியில் தலை குனிந்து நின்றேன்.

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.

Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.

Editor : PRABHU THILAAK

